

# Max Magik™

மிட்டாய்கள்




ஹாய் ! நான்தான் மேக்ஸ்.
எங்கிட்ட ருசியோ ருசியான
மேக்ஸ் ஸ்வீட்ஸ்கொஞ்சம்
இருக்கு. அது உனக்கும்,
எனக்கும் மட்டும்தான்.
நாம ஜாலியா தின்னுட்டு,
நாள் பூராவும் லூட்டி அடிப்போம்.
கமான், சில கேம்ஸோட
ஆரம்பிக்கலாம். மத்த
வேலையும் நிறைய இருக்கு.
இனிமே நீஅடிக்கிற
லூட்டியில் என்னையும்
சேர்த்துக்க மறந்துராதே !

## எதிர்பார்க்காததை எதிர்பாருங்க Max Magik™

உங்க பிரெண்ட்ஸ் எல்லாரையும் ஆச்சரியப்படுத்துங்க!!! இதோ இப்படித்தான். காலி தீப்பெட்டியை பாதி வரைக்கும் திறக்கணும். ஒரு 50 பைசா நாணயத்தை ( படத்தில இருக்கற மாதிரி) தீப்பெட்டியின் மேல்பகுதிக்கும், உள்பெட்டியின் விளிம்புக்கும் இடையில வெச்சு அழுத்திட்டு, தீப்பெட்டியை மூடணும். தீப்பெட்டிக்குள்ள 50 பைசா நாணயம் இருக்கறது தெரியும். இதுதான் மேஜிக்!!! மேக்ஸ்மேஜிக் ஸ்வீட்ஸு^ம் இது போலத்தான். ருசியோ ருசியான அசல் பழச் சுவைகள் வெளியில. உள்ளுக்குள்ள நிரம்பியிருக்கும் அசல் பழங்கள். அதாவது, ஆரஞ்சு & மிக்ஸ்டு ஃப்ரூட்ஸ், மாம்பழம் & ஸ்ட்ராபெர்ரி, மற்றும் பிளாக்கரண்ட்டு & ஆரஞ்சு!



## நாள் முழுதும் லூட்டி அடிக்கலாம்!!!




MAX™




2.5 g UNIT OF HARD BOILED CANDY.

** MRP INCL. OF ALL TAXES FOR EACH 3.6 g UNIT OF HARD BOILED CANDY.

ChocoMax™ மிட்டாய்கள்

50* ஒன்றுக்கு

ChocoMax™ சேலன்ஜ்

எனக்கு சாக்கோமேக்ஸோட க்ரீமி, மில்கி சாக்லெட்டி டேஸ்ட்டு ரொம்ப பிடிச்சது. அதனால, இன்னொரு செம டேஸ்ட்டான சாக்கோமேக்ஸுக்கு வழி சொல்லுங்களேன்.





MaxMasti™ புள்ளி விளையாட்டு.

மேக்ஸ் மஸ்தி ஸ்வீட்ஸ்ல ஸ்ட்ராபெர்ரி, பிளாக் கரண்ட், ஆரஞ்சு மற்றும் மாம்பழச் சுவையெல்லாம் இருக்குது. இதை ருசிச்சுகிட்டே எல்லா புள்ளிகளையும் சேர்த்து பாருங்க. மேக்ஸ் தெரியும் ஜோரா!!

25* ஒன்றுக்கு

MaxMasti மிட்டாய்கள்



# இலவசம்!

## கோல்டன் ஸ்கூல் கார்டு

250 கிராம் மற்றும் 100 கிராம் சக்ரா கோல்ட் டீயுடன். விரைந்திடுங்கள்!




ரவியின் அம்மா
சக்ரா கோல்ட் டீ வாங்கினார்.



அத்துடன் ரவிக்கு ஒரு "மை கோல்டன் ஸ்கூல் கார்டு" ஐடி...




..மற்றும் டைம் டேபிள் கிடைத்தது.




பிறகு ரவி ஒரு பாரத்தை பூர்த்தி செய்து தபாலில் அனுப்பினான்.




விரைவில் ஒரு நாள் அவன் ஸ்காலர்ஷிப், ஸ்போர்ட்ஸ் சைக்கிள் அல்லது பர்ஸ்ட் எய்ட் கிட் வெல்லக்கூடும்.*






CHAKRA GOLD BACK 2 SCHOOL Offer

டாட்டாவின்
சக்ரா கோல்ட் டீ
தங்கமான ருசி

*Offer valid till stock lasts. Conditions apply.



இந்தியப் பண்பாடு-வரலாறு 29



பிள்ளையார் அப்பனே! 24



மாயாஜால மலை 12



திடீர் சோதிடர் 38



## பொருளடக்கம்



இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph : 044-234 7384
234 7399
e-mail : advertisements
@chandamama.org

**டில்லி**
மோனா பாட்டியா
Ph:011-651 5111/
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022-266 1599/
266 1946/265 3057

**SUBSCRIPTION**

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

## ஓர் அரிய பொக்கிஷம்

இந்தியா சுதந்திரம் அடையும் தருணத்தில் அம்புலிமாமாவை நிறுவியவர்கள் நாட்டின் ஒருமைப்பாட்டைப் பேணி பாதுகாக்க புதிய முறையைக் கையாள விரும்பினார்கள். அவற்றில் ஒன்று நம் நாட்டுக் குழந்தைகளுக்கு நம் ரிஷிகளும், முனிவர்களும் மூதறிஞர்களும், மன்னர்களும் காட்டிய பழம் பெரும் பண்பாடுகளை விளக்கிக் கூறுவது. இதற்குக் கதைகளையும் அவற்றிற்கான சித்திரங்களையும் அவர்களுக்கு அளித்து அவர்களை நற்குடி மகன்களாக ஆக்குவதே அவர்களது நோக்கம்.

மற்றொரு வழி இக்கதைகளைச் சிறுவர்களுக்கு அவர்களுக்குத் தெரிந்த மொழிகளில் அளிப்பது. எளிதில் படித்துப் புரிந்து கொள்ளும் விதத்தில் அவை இருக்க வேண்டும் என எண்ணியே அம்புலி மாமாவையும் அதன் இதர மொழிப் பதிப்புகளையும் அவர்கள் வெளியிடத் தொடங்கினார்கள். இம்முயற்சிக்கு நீண்ட காலம் பிடிக்கும் என்பதும் பல இடையூறுகளைக் கடக்க வேண்டுமென்பதும் யாவரும் அறிந்தது தானே. இதனால் அந்தந்த மொழிப் பதிப்புகளில் பல சிறப்பு அம்சங்கள் புகுத்தப்பட்டன. இவை எல்லாப் பதிப்புகளிலும் ஒரே சமயத்தில் வெளியிடப்படாமலும் சில பதிப்புகளில் இந்த அம்சங்களில் சில இல்லாமலும் இருந்தன.

இந்த ஆகஸ்ட் இதழ் முதல் இந்த இதழின் பாதிப்பகுதி எல்லா மொழிப்பதிப்புகளிலும் இருக்கும். இது யாவருக்கும் பிற மொழிகளையும் அறிந்து கொள்ள வாய்ப்பளிக்கும்.

எனவே இனிவரும் இதழ்களை வாசகர்கள் அரிய பொக்கிஷமாகக் கருதி அவை பற்றிய தம் கருத்துக்களை எமக்கு எழுதுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஆசிரியர் : **விஸ்வம்**





# வாண்டுகள் ராஜ்யம்



**வியாழன்தோறும் மாலை 6 முதல் 6.30 மணிக்கு**



## குழந்தைகளுக்கு நீதிபோதனை சொல்வதுடன், பல இடங்களையும் சுற்றி காட்டும் நிகழ்ச்சி

# இளைய மேதைகள்

**வெள்ளிதோறும்**
**மாலை 6 முதல் 6.30 மணிக்கு**





## குழந்தைகளின் திறமையை வெளிப்படுத்தும் நிகழ்ச்சி



உங்கள் குழந்தையும் ஜெயா டிவியின் சிறுவர் **நிகழ்ச்சியில் கலந்து கொள்ள** விருப்பமா? **கீழ்கண்ட** கூப்பனை **பூர்த்தி செய்து,** பாஸ்போர்ட் சைஸ் போட்டோவுடன் இணைத்து எந்த **நிகழ்ச்சியில் கலந்து கொள்ள** விருப்பம் என்பதையும் ☑ செய்து **ஜெயா டிவி, சிறுவர் நிகழ்ச்சிப் பிரிவு, 48, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை** என்ற முகவரிக்கு அனுப்பவும்.

☐ **Kids Q** ☐ **Kids News** ☐ **இளைய மேதைகள்** ☐ **வால் பசங்க** ☐ **வாண்டுகள் ராஜ்யம்**

பெயர் ______________________ வயது __________

த/பெயர் ______________________________

முகவரி ______________________________

______________________________

குழந்தையின் திறமை ______________________

We had, on behalf of our readers who expressed anxiety, written to the Prime Minister, Shri Vajpayee, wishing him speedy recovery from his recent surgery. His response printed on this page is full of appreciation of and encouragement to the task undertaken by *Chandamama* to provide insights into India's heritage. As we express our gratitude to him, and share the message with our readers, we rededicate ourselves to the objectives of the founders to promote national integration through this multi-lingual magazine. **-Editor**



प्रधान मंत्री
Prime Minister

New Delhi
June 23, 2001

Dear Shri Reddi,

Thank you for your kind letter dated June 16, 2001 conveying the good wishes of the readers of *Chandamama* for my speedy recovery after the recent knee surgery. I appreciate their warm and affectionate sentiments and reciprocate the same.

I am delighted to know that *Chandamama*, which has mesmerized millions of students with stories drawn from India's rich cultural heritage has successfully re-launched itself in twelve language editions. What has especially gladdened me is that you have also started to publish a Sanskrit edition of the magazine to popularize this ancient but ever-living language, which is the basic source of our culture and philosophical heritage.

I admire your courage and commitment since this must be a difficult task for you. However, knowing that you have the benefit of the collaboration of Sanskrit Bharati in New Delhi, which has been doing commendable work in taking Sanskrit to the masses, I am sure your effort will bear fruits.

The task of providing greater patronage and promotion to Sanskrit has to be shared by the Government as well as non-governmental agencies, especially, the mass media. *Chandamama's* bold effort, therefore, deserves our highest appreciation.

With best wishes,

Yours sincerely,

(A.B. Vajpayee)




# 7

(சமரபாகுவையும் அவனது ஆளையும் கரடித்தோலர்கள் கூட்டம் தம் கோட்டைக்குக் கொண்டு சென்றார்கள். ஜீவதத்தனும் கஜவர்மனும் அவர்களது இருப்பிடத்தைக் கண்டு பிடித்து அங்கு சென்றார்கள். அங்கு அவர்கள் கரடியப்பரின் ஆட்களிடம் அகப்பட்டு ஓநாய்ப்பாறைக்கு ஒரு சுரங்கப்பாதை வழியாகக் கொண்டு செல்லப்பட்டார்கள்.)

கரடித்தோலர்கள் இருட்டில் ஜீவதத்தனையும் நடத்திக் கூட்டிப் போய் ஓரிடத்தில் நின்றார்கள். அப்போது முன்னால் நின்ற கரடித்தோலன் பின்னால் நின்றவனிடம் ''அண்ணே! ஓநாய்ப்பாறை என்றால் ஏதோ வேடிக்கை நடக்கும் இடம் என்று இவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஓநாய்கள் கூவுவதைக் கேட்டும் இவர்கள் பயப்படாமல் இருப்பது ஆச்சரியமாக இல்லையா?'' என்று கேட்டான்.

மற்றவனும் ''அது என்ன என்பதை இவர்களுக்குக் காட்டத்தான் போகிறோமே'' எனக் கூறி அங்கிருந்த கொக்கியைப் பிடித்து பலமாக இழுத்தான். அப்போது ஒரு சிறுகதவு திறந்து உள்ளே நிலாவெளிச்சம் விழுந்துள்ளதைக் காட்டியது.

அப்போது ஜீவதத்தன் ''கஜா! இது தான் இவர்கள் மறைந்து வாழும் இடம் போலத் தெரிகிறது'' என்றான்.

அதைக் கேட்ட ஒரு கரடித்தோலன் பலமாகச் சிரித்து ''இந்த இடத்தில் நாங்கள் மட்டும் வாழவில்லை. இங்கு பல ஓநாய்கள் உள்ளன. அவற்றிடமிருந்து நீங்கள் தப்பினாலே எங்கள் குரு கரடியப்பரை



காண முடியும்'' என்றான். ஜீவதத்தனும் ''ஓகோ! அப்படியா?'' என்றவாறே திறந்த கதவின் இடைவெளி வழியாகப் பார்த்தான். உள்ளே சற்றுத் தொலைவில் பத்து பனிரெண்டு அடி உயரத்தில் ஒரு பாறை இருந்தது. அதன் மீது இருவர் நின்று தம் ஈட்டிகளால் தம் மீது பாய வரும் ஓநாயை பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள். வேறு சில ஓநாய்கள் அந்தப் பாறையைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

அப்போது ஜீவதத்தன் ''பாறை மீது இருப்பவர்கள் சமரபாகுவும் அவனது ஆளுமாக இருக்கலாமோ?'' என்று கஜவர்மனிடம் கேட்டான்.

அதற்கு பதில் கூறுவது போல கரடித்தோலன் ஒருவன் ''அவன் சமரபாகுவோ, வெல்லப்பாகுவோ? சற்று நேரத்தில் ஓநாய் களுக்கு அந்த இருவரும் இரையாகப் போகிறார்கள். அவர்களைப் போல நீங்கள் இருவரும் தான் மடியப் போகிறீர்கள். ஒரு வேளை நீங்கள் விருகேஸ்வரி தேவியின் கருணையால் உயிர் தப்பினால் எம் கரடியப்பரின் சீடர்களாகி அவருக்குப் பணிபுரியும் பாக்கியத்தை அடையவாம்'' என்றான்

ஜீவதத்தனோ ''ஏய்! சும்மா பிதற்றாதே. நாங்களும் அந்தப்பாறைக்குத் தானே போக வேண்டும்? வா, போகலாம்'' என்றான்.

அது கேட்டுக் கரடித்தோலன் ''அடேயப்பா! அவ்வளவு துணிச்சலா? கொஞ்சமும் பயமே இல்லையா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

பிறகு அவன் ''சரி. வாருங்கள். இதோ தெரியும் சுரங்கப் பாதை வழியாக அங்கே செல்வோம்'' என்றான்.

அவர்களும் அப்பாதை வழியே சற்று தூரம் சென்று ஒரு சதுரமான கல்லை அடைந்தார்கள். கரடித் தோலர்கள் அதில் பிணைத்திருந்த கம்பியைப் பிடித்து பலமாக ஆட்டித் தூக்கினார்கள். அது அகன்றதும் சமர பாகுவையும் அவனது ஆளையும்

ஜீவதத்தனும் கஜவர்மனால் நன்கு பார்க்க முடிந்தது.

பலகை நகர்ந்ததுமே சமரபாகு ''குண்டு! பலகை திறக்கப் பட்டு விட்டது. ஓநாய்கள் பாய்ந்து வரப் போகின்றன. ஜாக்கிரதை'' என்று எச் சரித்தான்.

அப்போது ஜீவதத்தன் ''சமரபாகு! வருவது நாங்களே. உன் நண்பர்கள்'' என்று உரத்த குரலில் கூறினான். அவர்களைப் பார்த்த சமரபாகு ஆச்சரியப்பட்டான். அப்போது கரடித் தோலன் ''நீங்களெல்லாம் நண்பர் களாக இருந்தால் மட்டும் என்ன? எல் லோரும் கூண்டோடு ஓநாய்களுக்குத் தானே இரையாகப் போகிறீர்கள்'' என்று கூறி ஏளனமாகச் சிரித்தான்.

பிறகு அந்தக் கல்லை முன் போல வைத்து வழியை அடைத்து விட்டு அவ்விருவரையும் சமர பாகுவின் அருகே கொண்டு போய் நிறுத்தினான்.

ஜீவதத்தனும் ''சொர்ணம் உங் களைப் பற்றிக் கூறினான். நாம் யா வரும் பத்திரமாகத் திரும்பிப் போகப் போகிறோம். இதை நீ முழுமையாக நம்பலாம்'' என்றான்.

இச்சமயத்தில் ஒரு ஓநாய் பாறை மீது ஏற முயன்றது. கஜவர்மன் தன் வாளால் அதன் தலையைத்தூக்கி அதைப் பிடித்துத் தூக்கிப் பாறை மீது போட்டான். ஜீவதத்தன் கஜனைப் பாராட்டி விட்டு சமரபாகுவிடம்



''இங்குள்ள ஓநாய்களுக்கு எப் போது உணவைப் போடு கிறார்கள் என்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

சமரபாகுவும் ''சூரியன் உதிக்கும் போதும், மறையும் போதும் இவற் றிற்கு ஏதாவது ஒரு மிருகத்தின் மாமி சத்தைப் போடுவார்கள். - அதோ தெரியும் கதவைத் திறந்து தான் அவ் வாறு போடுவார்கள்'' என்று கூறி அங் கிருந்த ஒரு கதவைச் சுட்டிக் காட்டி னான். சற்று நேரத்திற்குப் பின் சூரி யோதயமும் ஆனது.

அப்போது ஓநாய்கள் அக்கத வருகே வந்து கத்தலாயின. ஜீவதத்தன் கஜவர்மனுக்கு அக்கதவைச் சுட்டிக் காட்டி ''கரடித் தோலர்கள் இன்னமும் சற்று நேரத்தில் ஓநாய்களுக்கு



பட்டது. தியானத்தில் இருந்த கரடி யப்பர் கண் விழித்து எழுந்து பார்த்தார். அப்போது ஒரு கரடித் தோலன் ஓடி வந்து ''குருவே! ஓநாய்ப் பாறை மீதிருந்த ஒருவன் நம் ஆள் ஒருவனை அம்பால் அடித்துக் கொன்று விட்டான்'' எனத் தெரிவித்தான்.

அதைக் கேட்ட கரடியப்பர் கடும் கோபம் கொண்டு ''விருகேஸ்வரி தேவியின் பக்தனான எனக்கா யாரோ சவால் விடுகிறான்! இப்போதே அவர்களை ஒழித்து விடுகிறேன்'' எனக் கூறிக் கொண்டு கையில் சூலத்தை எடுத்துக் கொண்டு கிளம் பினார். அவர் ஓநாய்ப் பாறையை அடைந்து அதன் மீது நின்று கொண்டி ருந்த நால்வரையும் பார்த்து ''அடே பாவிகளே! விருகேஸ்வரியின் பக்தன் ஒருவனை அம்பு எய்து கொன்று விட் டீர்களா? இப்போது என் சூலத்தால் குத்தி உங்களை எல்லாம் ஓநாய் களுக்கு இரையாக்குகிறேன் பார்'' என்று உறுமினான்.

அது கேட்டு ஜீவதத்தன் பலமாகச் சிரித்து ''கரடியப்பா! நீ கரடியின் பெயர் வைத்துக் கொண்டு ஏன் ஓநாய் களை உதவிக்கு வைத்துக் கொண்டி ருக்கிறாய்? இதோ நானே கீழே இறங்கி வந்து உன்னைத் தாக்கு கிறேன்'' என்றான்.

சமரபாகுவோ ''ஐயோ! கீழே இறங்க வேண்டாம். ஓநாய்கள்

மாமிசத்தைப் போடப் போகிறார்கள். நீ வில்லை எடுத்து வைத்துக் கொண்டு அம்புகளுடன் தயாராக இரு'' என்று கூறினான்.

கஜவர்மனும் வில், அம்புகளுடன் தயாராக நின்றான். சற்று நேரத்தில் அக் கதவு திறக்கப்பட்டது. கரடித் தோலர்கள் ஒரு பெரிய தட்டில் மாமி சத்தை எடுத்துக் கொண்டு வந்தனர். அப்போது கஜவர்மன் எய்த அம்பு மாமிசத்தை எடுத்துக் கொண்டு வந்த ஒருவனின் மார்பைத் துளைத்துக் கொண்டு சென்றது. அவன் ஆவென அலறித்துடி துடித்துக் கீழே விழுந்து இறந்து போனான்.

அப்போது அவன் பிடித்து வந்த மாமிசத்தட்டு தரை மீது விழுந்தது. அப்போது பெருத்த ஆரவாரம் ஏற்

உங்களைக் குதறிவிடும். மேலும் இந்தக் கரடியப்பன் மந்திர தந்திரங் களில் கை தேர்ந்தவன். எனவே அவனோடு மோத வேண்டாம்'' என்று எச்சரித்தான். கஜவர்மனோ ''என் வாளிலும் ஜீவதத்தனின் மந்திரத் தடியிலும் நீ கூறும் மந்திர சக்தி அதிகமாக உள்ளது. அதனால் இந்தக் கரடியப்பனாலோ அல்லது ஓநாய் களாலோ எதுவும் செய்ய முடியாது'' என்றான்.




அப்போது ஜீவதத்தன் கரடியப்பர் நிற்கும் இடத்தை கஜவர்மனுக்கும் மற்ற இருவர்களுக்கும் காட்டி ''நாம் இங்கிருந்து வெளியேறு வதற்கு வழி கரடியப்பர் நிற்கும் இடத்தில் தான் உள்ளது. அதனால் ஓநாய்களை வேட்டையாடி, கொன்று கரடியப்பரின் கோட் டையைத் தாக்கி சின்னாபின்னப் படுத்துவோம்'' என்றான்.

கஜவர்மனும் ''நான் கொன்ற ஓநாயைத் தூக்கிக் கொண்டு வருகிறேன். அதைத் தின்ன ஓநாய்கள் வரும். அப்போது என் வாளால் அவற்றை வெட்டி எறிகிறேன்'' என்றான்.

ஜீவதத்தனும் ''சரி. நாம் இங் கிருந்து கீழே குதிக்கலாம். நீ ஓநாய் களை கவனித்துக் கொள். நான் கரடி யப்பனை தாக்குகிறேன்'' என்றான்.

மறு விநாடியே அவர்களி ருவரும் பாறை மீதிருந்து கீழே குதித்தனர். ஒருவன் இறந்து போன ஓநாயைச் சுமந்து கொண்டு வந்ததைக் கண்ட ஓநாய்கள் அவனை நோக்கி ஓடி வந்தன. கஜவர்மன் ஓநாயைக் காட்டி அவற்றை அலைய வைத்து தன் வாளால் தாக்கி கொன் றான். ஜீவதத்தனும் சில ஓநாய்களை அடித்துக் கொன்ற வாறே கரடி யப்பரை அணுகினான்.

முதலில் ஓநாய்களிடையே ஜீவ தத்தனும் கஜவர்மனும் இருப்பதைக் கண்டு அவர்களை ஓநாய்கள் கொன்று விடும் என்றே கரடியப்பர் எதிர்ப்பார்த்து தியானத்தில் மூழ்கி னார். அதைக் கண்ட கஜவர்மன் தன் கையிலிருந்த இறந்து போன ஓநாயை அவர் மீது எறிந்தான். தம் உணவு கரடியப்பரின் பக்கத்தில்




விழுந்ததைக் கண்ட ஓநாய்கள் அவரை நோக்கி ஓடின. தன் மீது ஒரு ஓநாய் விழுந்தது கண்டு கரடியப்பர் தட்டுத் தடுமாறி விழுந்தார். அவர் பின்னால் நின்ற சீடர்களோ ''ஐயோ ஓநாய்'' என்று அலறியவாறே வந்த வழியே ஓட்டம் பிடித்தனர்.

கரடியப்பர் நடுநடுங்கியவாறே பார்த்தார். சற்று தூரத்தில் இறந்து போன ஓநாயின் உடலை சில ஓநாய்கள் கடித்துக் குதறிக் கொண்டிருந்தன. ஒரு ஓநாய்க்கு அங்கு இடம் கிடைக்காததால் அது கரடியப்பரை நோக்கிப் பாய்ந்தோடி வந்தது. அதைக் கண்ட கரடியப்பர் பயந்து தாம் வந்த சுரங்கப் பாதையில் வேகமாக ஓடி மறைந்தார்.

ஓநாய்களை விரட்டிய பின் ஜீவதத்தனும் கஜவர்மனும் கரடியப்பர் ஓடிப் போன வழியில் நின்று என்ன நடக்கிறது என்று பார்க்கலானார்கள். ஓநாய்கள் அந்த சுரங்கப்பாதையில் தான் கரடியப்பரைத் துரத்திக் கொண்டு ஓடின.

அப்போது ஜீவதத்தன் கஜவர்மனிடம் ''இனி ஓநாய்கள் கரடியப்பரை என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். அது பற்றி நாம் கவலைப்பட வேண்டாம். அவர்கள் இங்கிருந்து காட்டை நோக்கி ஓடி விடுவார்கள். ஆனால் கரடியப்பரை மட்டும் விட்டு வைக்கக் கூடாது'' எனக் கூறி ச்மர பாகுவையும் அவனது ஆளையும் பாறையிலிருந்து இறங்கி வருமாறு உரக்கக் கூவினான்.

சமரபாகுவோ ''எனக்கு பயமாக இருக்கிறது. அந்தக் கரடியப்பரோ

அல்லது ஓநாய்களோ எப்போது வேண்டுமானாலும் வந்து எங்களைத் தாக்கலாமே. ஓநாய்களோ பயங்கர மானவை என்பதை நீங்களே நேரில் பார்த்தீர்கள். கரடியப்பரோ மந்திர சக்தி படைத்தவர். எனவே நாம் இங் கிருந்து தப்பி விடமுடியும் என்பது முடியாது'' என்றான்.

அதைக்கேட்ட கஜவர்மன் பலமாகச் சிரித்து ''சமரபாகு! நீ எங்களைப் பற்றி சரியாக அறிந்து கொள்ளவில்லை. ஆனால், உன் தவறில்லை. என் வாளும் ஜீவதத் தனின் மந்திரத்தடியும் மிகவும் சக்தி வாய்ந்தவை. அதனால் கரடியப் பராலும் எதுவும் செய்ய முடியாது. ஓநாய்களையும் நாங்கள் கொன்று விடுவோம்'' என்றான்.

ஜீவதத்தனும் ''சமரபாகு! கஜ வர்மன் கூறியதைக் கேட்டாயா? அவன் சொன்னதெல்லாம் சரியே. நீ பயப்படாதே. ஓநாய்களும் கரடியப் பரும் வந்து உன்னைத்தாக்காத படி நான் பார்த்துக் கொள்கிறேன். பயப் படாமல் இறங்கி இங்கே வா. உன் ஆளையும் வரச் சொல்'' என்றான்.

ஜீவதத்தனும் கஜவர்மனும் கூறி யதைக் கேட்டு பயத்தை விட்டு சமர பாகுவும் அவனது ஆளும் பாறை யிலிருந்து இறங்கி வந்தார்கள்.

அவர்கள் அருகே வந்ததும் ஜீவ தத்தன் ''சமரபாகு! நாம் இந்த வழியில் போய் கரடியப்பரையும் அவரது ஆட் களையும் எதிர்க்கப் போகிறோம்'' என்றான். சமரபாகுவும் ''நாமோ நான்கு பேர்களே தாம். அந்தக் கூட்டத் தவரை வெல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

ஜீவதத்தனும் ''நான் இங்கிருந்து தப்பிப் போக இந்த வழியில் தான் போயாக வேண்டும். அவர்கள் எவ் வளவு பேர்களானாலும் கவலைப் பட வேண்டாம். நம்மிடம் மனஉறுதி உள்ளது. பலம் உள்ளது. மந்திரசக்தியும் உள்ளது. எனவே நீ பயப்படாமல் வா. போவோம்'' என்றான். இதற்குள் அங்கே வந்த ஓரிரு ஓநாய்கள் சமர பாகுவை நோக்கி ஓடி வந்தன.

(தொடரும்)






# மகன் திருந்தினான்!

கலிங்கப் பட்டணத்தில் கார் மேகன் என்ற பணக்கார வியாபாரி இருந்தான். அவன் நியாயம் நேர்மை தவறாதவன் என்றதால் தம் வழக்கு களைப் பலர் அவனிடம் கூறி தீர்ப் பைப் பெற்றுத் திருப்தி அடைந்து வந்தார்கள்.

கார்மேகனுக்கு கோபாலன் என்ற ஒரே மகன் இருந்தான். அவன் குடி, சூதாட்டம் போன்ற கெட்ட பழக்கங் களுக்கு அடிமையாகி விட்டான். அவனது தந்தை பல முறைகளில் அறி வுரைகள் கூறிப் பார்த்தும் அவன் சற்றும் திருந்தவில்லை.

இது கார்மேகத்திற்குப் பெரும் கவலையாகப் போய் விட்டது. தன் ஒரே மகனான அவனை இப்படியே போக விட்டால் தனக்குப் பின் பணம் சொத்து எல்லாம் இழந்து ஒட்டாண்டியாகிப் பரிதவிப்பானே, அவனை எப்படித் திருத்துவது என்று யோசிக்கலானான். அவனுக்கு ஒரு வழி தோன்றியது.

அவன் மகனிடம் ''கோபாலா! நான் கடல் கடந்து நாடுகளுக்குப் போய் வியாபாரம் செய்து நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டு வரப் போகிறேன். வியாபாரத்திற்கு நிறை யப் பணம் தேவைப்படுமாதலால் இங்குள்ள பணத்தை எல்லாம் எடுத்துக் கொண்டு போகப் போகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட கோபாலன் திடுக் கிட்டு ''எல்லாப் பணத்தையும் எடுத்துக் கொண்டு போய் விட்டால் என் செலவுக்கு நான் என்ன செய் வது?'' என்று கேட்டான்.

கார்மேகமும் ''கவலைப்படாதே நீ ஊராரிடம் கடன் வாங்கிக் கொள். நான் திரும்பி வந்து எல்லாக் கடன் களையும் அடைத்து விடுகிறேன்'' என்றான்.

கார்மேகம் கப்பலேறி வியாபாரம் செய்ய எல்லாப் பணத்துடன் அயல் நாட்டிற்குக் கிளம்பினான்.

கோபாலன் எப்போதும் போல குடி, சூதாட்டம் என்று பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தான். கையில் பணம் இல்லையென்றாலும் ஊரில் எல்லோரிடமும் கடன் வாங்கி செலவு செய்து வந்தான். வரவர அவனுக்குக் கடன் கிடைப்பதும் சிரமமாக இருந்தது.

ஒரு நாள் இருமாலுமிகள் வந்து கோபாலனைக் கண்டு ''உன் தந்தை வந்த கப்பல் புயலில் சிக்கிக் கடலில் மூழ்கிவிட்டது. அதிலிருந்த பொருள் களும் உன் தந்தை உட்பட எல்லாப் பயணிகளும் மூழ்கி இறந்து போய் விட்டார்கள். அதிலிருந்து உயிர் தப்பியவர்கள் நாங்கள் இருவருமே'' எனக் கூறினார்கள்.

அது கேட்டு கோபாலன் திகைத்துப் போனான். கார்மேகம் கடலில் மூழ்கி இறந்து விட்டா னென்ற செய்தி ஊர் முழுவதும் பரவியது.

அப்போது கோபாலனுக்குக் கடன் கொடுத்தவர்கள் அவனிடம் வந்து ''நீ எங்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடு'' என்று நெருக்கினார்கள்.

அவனும் தன் தந்தை விட்டுப் போன வீடுகளையும், நிலபுலன் களையும் விற்றுக் கடன்களை அடைக்கலானான். அச்சமயத்தில் வேறு சிலர் அவனது தந்தை தம்மிடம் கடன் வாங்கி இருப்பதாகக் கூறிப் பத்திரங்களைக் காட்டிப் பணத்தை வசூலித்துக் கொண்டு போனார்கள். கோபாலன் கணக்குப் புத்தகங்களைப்




பார்த்து தன் தந்தையிடம் சிலர் கடன் வாங்கி இருப்பது கண்டு அவர்களிடம் பணத்தைக் கேட்டான். அவர்களோ தாம் கடன்களை எப்போதோ செலுத்தி விட்டதாகக் கூறி அவனது தந்தை கொடுத்த ரசீதுகளைக் காட்டினார்கள்!

கோபாலன் எல்லாக் கடன் களையும் அடைக்க வீட்டிலிருந்த சாமான்களைக் கூட விற்க வேண்டிய தாயிற்று. கடைசியில் அவனுக்கு மிஞ்சியது ஒரு வீடு தான். அவனால் முன் போலக் குடி, சூதாட்டம் என் றெல்லாம் வீண்பொழுது போக்க முடியவில்லை. வாழ்வதற்கு உழைக்க வேண்டியதாயிற்று. அவனது நண்பர்களென்று அவனை முன்பு சுற்றிச் சுற்றி வந்தவர்க ளெல்லாம் இப்போது அவனை ஏறெடுத்துக் கூடப் பார்க்க வில்லை.

இந்த நிலையில் அவனது பிறந்த

நாள் வந்தது. முன்பெல்லாம் அந்த நாள் எப்படி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது என்பதை கோபாலன் எண்ணி மனம் நொந்து போய் வீட்டில் ஒரு மூலையில் முடங்கிக் கிடந்தான். அப்போது சில ஆட்கள் அவனது வீட்டிற்கு வந்து அதை அலங்கரித்தார்கள். வேறு சிலர் பல வித உணவுப் பண்டங்களை கொண்டு வந்தார்கள்.

ஊர்ப் பிரமுகர்களெல் லாம் தன் வீட்டிற்கு வந்தது கண்டு கோபாலன் ஆச்சரியப்பட்டான். அதை விட அவனுக்கு ஆச்சரியம் அளித்தது அவனது தந்தை அவனது உறவினர்களுடன் அங்கு வந்து சேர்ந்தது தான்.

தன் தந்தையைக் கண்டதும் அவன் மிகவும் மகிழ்ந்து போய் ''அப்பா! வாருங்கள். என் பிறந்த நாளை யாரோ தெரிந்து கொண்டு இப்படி தடபுடலாக ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். அவர்கள் யாரென்று தெரியவில்லை. நம்மிடம் முன் போலப் பணமோ சொத்தோ இல்லை. எல்லாவற்றையும் என் கடன்காரர்களும் உங்களுக்குக் கடன் கொடுத்தவர்களும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்'' என்றான்.

கார்மேகமும் ''இந்த ஏற்பாடுகளை எல்லாம் செய்தது நான் தான். நம் சொத்துக்களில் எதுவும் நம்மை விட்டுப் போய் விடவில்லை. எல்லாம் நம்மிடமே இருக்கின்றன. இதோ அவற்றிற்கான பத்திரங்கள். நீ திருந்த வேண்டும் என்பதற்காகவே நான் கடலில் மூழ்கி இறந்து போனதாக ஒரு செய்தியைப் பரப்பி எனக்குப் பலர் கடன் கொடுத்தார்கள் என்று உன்னை நம்ப வைத்தேன். நீயும் உழைப்பின் முக்கியத்தை உணர்ந்து திருந்தி விட்டாய்! இது தான் நான் எதிர்பார்த்தது. அது நடந்து விட்டது'' என்று கூறித்தன் மகனைக் கட்டித் தழுவினான்.

கோபாலன் மெய் சிலிர்த்து நின்றான்.





வேதாளம் சொல்லும் கதை

# கவிஞர் கண் திறந்தது!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அவ்வுடலில் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் இப்படி சிரமப்படுகிறாயே! நீ இப்போது யாரையாவது பண்டிதரையோ அல்லது கவிஞரையோ காணப் போகிறாயா? பொதுவாக இவர்கள் அகம்பாவம் கொண்டவர்கள். இவர்களது மனம் ஒரு நிலையில் இராது. மற்ற



பண்டிதர்கள்ளை மதிக்காதவர்கள். அவர்களைக் கண்டு பொறாமையும் கொள்பவர்கள். இதற்கு எடுத்துக் காட்டாக ஞானேஸ்வரர் என்ற பண்டிதரின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

முன்னொரு காலத்தில் மகாநதிக் கரையில் மரகதவனம் என்ற சிறு ஊர் இருந்தது. அங்கு ஞானேஸ்வரர் என்ற பண்டிதர் இருந்தார். அவருக்குப் பண்டிதர்களிடையேயும் படித்தவர்களிடையேயும் நல்ல பெயர் இருந்தது. அவரது படைப்புக்கள் அவர்களது பாராட்டுகளைப் பெற்றன. அவரும் தம் படைப்புகளும் இதர இலக்கிய நூல்களும் படித்தவர்களால் மட்டுமே படிக்கப் பட்டு ரசிக்கத்தக்கது என்றும் பாமரர்கள் அவற்றைக் கேட்கக் கூட அருகதையற்றவர்கள் எனவும் எண்ணி பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார். எனவே அவரது சொற்பொழிவுகளும், வாதவிவாதங்களும் ஒரு குறிப்பிட்ட படித்தவர்களின் வட்டத்திற்குள் தான் அடங்கி இருந்தது. பாமர மக்களுக்கும் அவருக்கும் தொடர்பே இருக்கவில்லை.

ஆனால் அவரது மகன் சித்தேஸ்வரன் அவருக்கு நேர்மாறான இயல்புடையவன். அவன் இலக்கியப் பாடல்களை வயல் வரப்புகளில் அமர்ந்து பாமரர்களுக்கும் விவசாயத் தொழிவாளிகளுக்கும் எடுத்துக் கூறி அவர்களை அவற்றைக் கேட்டு மகிழும்படிச் செய்து வந்தான். ஞானேஸ்வரர் தம் மகனின் இந்த செயலைக் கண்டித்து ''இலக்கியங்கள் மிகப் புனிதமானவை. அவை பற்றி கண்டவர்களுக்குக்கெல்லாம் எடுத்துக் கூறினால் அவற்றின் புனிதத் தன்மையே போய் விடும்'' என்று கூறிப் பார்த்தார்.

ஆனால் சித்தேஸ்வரனோ தன் போக்கை மாற்றிக் கொள்ளவே இல்லை. அவனுக்கு பண்டிதர்களிடையேயும் பாமர மக்களிடையேயும் பேரறிஞர் என்ற மதிப்பு இருந்தது.

சித்தேஸ்வரன் இளம் வயதானதால் அவனுக்குத் தன் மகளை விவாகம் செய்து வைக்க அயலூர் பண்டிதர் பரமேஸ்வரபட்டர் முன் வந்தார். ஞானேஸ்வரரும் அப்பண்டிதரின் மகளான காதம்பரியிடம்

பேசிப்பார்த்து அவள் இலக்கியங் களை நன்கு கற்றறிந்தவள் எனக் கண்டு கொண்டு அவளைத் தன் மக னுக்குத் திருமணம் செய்து வைத்தார். அவளும் ஞானேஸ்வரரின் வீட்டிற்கு வந்து குடித்தனம் செய்யலானாள். அவளது நற்குணங்களையும், நல் அறிவையும் கண்டு அவ்வூராரும் அவளைப் புகழ்ந்தார்கள்.

ஒரு நாள் மாலைப் பொழுதில் ஞானேஸ்வரர் தம் வீட்டுக் கொல்லைப் புறத்திலுள்ள மாட்டுக் கொட்டிலின் பக்கம் சென்றார். அங்கே ஏதோ பேச்சுக் குரல் கேட்கவே அவர் ஒரு ஓரமாக நின்று அதைக் கேட்கலானார்.



மாட்டுக்கார மாதவன் ஒரு பசு மாட்டின் பாலைக் கறந்து கொண் டிருந்தான். அவனுக்குச் சற்று தூரத் தில் நின்று கொண்டிருந்த காதம்பரி தன் இனிய குரலில் லீலாசுகரின் கிருஷ்ண லீலா தரங்கிணியிலிருந்து ஒரு சுலோகத்தைக் கூறினாள்.

அதைக் கேட்ட மாதவன் ''கேட்க மிக நன்றாக இருக்கிறதே. இதன் அர்த்தத்தைச் சொன்னால் நான் புரிந்து கொள்வேன்'' என்றான். காதம்பரியும் ''சொல்கிறேன். கேட்டுக் கொள்'' என்று கூறிச் சொல்லலானாள்.

''இந்த சுலோகத்தை லீலாசுகர் என்ற மாபெரும் பண்டிதர் கிருஷ்ண லீலா தரங்கிணி என்ற காவியத்தில் எழுதியுள்ளார். அது சமஸ்கிருத மொழியில் சிறந்த படைப்புகளில் ஒன்றாகும். இதில் கவிஞர் ஸ்ரீ கிருஷ் ணரின் லீலைகளை விவரித்தி ருக்கிறார். மாதவா! ஒரு நாள் மாலை கோகுலத்தில் யசோதை உன்னைப் போலவே பாலைக் கறந்து கொண்டி ருந்தாள்.

அப்போது பாலகிருஷ்ணர் ஓடி வந்து யசோதையின் முதுகில் சாய்ந்து கொண்டு ''அம்மா! எனக்குப் பால் கொடு'' என்று கேட்டாராம். யசோதையும் ''இப்போது இல்லை கண்ணா! இருட்டிய பிறகு கொடுக்கி றேன்'' என்றாளாம்.

அதைக் கேட்ட சிறுவரான கிருஷ்ணர் ''இருட்டா? அப்படி என்றால் என்ன?'' என்று கேட்கவே, யசோதையும் ''இருட்டு என்றால் அதில் நமக்கு எதுவுமே தென் படாமல் இருக்கும்'' என்றாள்.



அப்போது அந்த சின்னக் கிருஷ்ணர் என்ன செய்தார் தெரியுமா? அவர் தம் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டு ''அம்மா! எனக்கு இப் போது எதுவும் தெரியவில்லை. இருட்டி விட்டது. அதனால் பாலைக் கொடு'' என்று கேட்டாராம்.

இந்த மாதிரி ஸ்ரீ கிருஷ்ணரின் பல குறும்பு விளையாட்டுகளை லீலா சுகர் தம் படைப்பில் வர்ணித்து இருக்கிறார்.''

இவ்வாறு காதம்பரி கூறியதும் மாதவன் கண்களை அகல விரித்து ''ஆஹா. எப்படியெல்லாம் கவிஞர் அழகாக மனதில் பதியும்படி எழுதி யுள்ளார்! நீங்கள் இப்படி விளக்கிக் கூறியது போல நம் ஊரிலுள்ள பண்டி தர்கள் எல்லோரும் என் போன்ற பாமரர்களுக்கு விளக்கிப் புரியும் படிக் கூறினால் எவ்வளவு நன்றாக இருக்கும்'' என்றான்.

காதம்பரியும் ''நீ சொல்வது சரி தான். அது எல்லோருக்கும் பொது வானது. பண்டிதர்களும் சரி, பாமரர் களும் சரி, அவற்றைக் கேட்கவும், படிக்கவும், ரசிக்கவும் உரிமை பெற்ற வர்கள். ஆனால் நம் பண்டிதர்கள் இலக்கியங்களைப் பாமரர் வரை செல்ல விடாமல் தடுத்து விடுகி றார்கள். அவை பற்றி அவர்கள் தமக் குள்ளேயே பேசிக் கொள்கிறார்கள். இவற்றைப் பண்டிதர்களால் மட் டுமே புரிந்து கொண்டு வாதப் பிரதி வாதங்களைச் செய்வதால் பாமரர் களால் அவற்றில் கலந்து கொள்ள முடியாது போகிறது. இதைப் புரிந்து கொண்டு பண்டிதர்கள் நடந்து கொள்வதே நல்லது'' என்றாள்.

அதைக் கேட்ட மாதவனும் ''ஆமாம் அம்மா! நீங்கள் சொல்வது மிகவும் சரியே. உங்கள் மாமனார் பண்டிதர்கள் மத்தியில் பேசுவதை சில சமயங்களில் கேட்டிருக்கிறேன். அவர் சொன்னது எதுவுமே எனக்குப் புரிந்ததே இல்லை. அவர்கள் எல் லாம் நீங்கள் எனக்கு விளக்கியது போல என் போன்றவர்கள் புரிந்து கொள்ளும்படிக்கூறினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!'' என்றான்.

இந்த உரையாடலைக் கேட்ட ஞானேஸ்வரின் மனம் பெரிய மாறு தலையே அடைந்தது. அவர் எதுவும் பேச இயலாமல் அங்கிருந்து உடனே

சென்றார். மறுநாள் காலை மாதவன் பால் கறந்து கொண்டிருந்த போது ஞானேஸ்வரர் அவனருகே நின்று கொண்டு லீலாசுகரின் கிருஷ்ண லீலா தரங்கிணியிலிருந்து வேறொரு சுலோகத்தைக் கூறி மாதவன் புரிந்து கொள்ளும் விதத்தில் அதன் பொருளைச் சொல்லிக் கொண்டு இருந்தார்.

இதையெல்லாம் பார்த்தும் கேட்டுக் கொண்டும் இருந்த காதம்பரியும், சித்தேஸ்வரனும் ஆச் சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தனர்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''ஞானேஸ்வரர் இலக்கியங்கள் மிகப் புனிதமானவை என்றும் அவை பற்றிக் கண்டவர்களுக்கெல்லாம் விளக்கிக் கூறக் கூடாது எனச் சொல்லிக் கொண்டு இருந்தாரே. ஆனால் திடீரென மனமாற்றம் ஏன் அவரிடம் ஏற்பட்டு மாதவன் போன்ற வர்களுக்கு அவை பற்றி விளக்க லானார்? இக்கேள்விக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ பதில் கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஞானேஸ்வரர் தாம் மெத்தப் படித்தவர் என்பதால் தமது வட்டாரத்தை மிகவும் குறுக்கிக் கொண்டிருந்தார். அவரைப் பற்றியும் அவரது படைப்புகளைப் பற்றியும் ஒரு சில பண்டிதர்களே புகழ்ந்தனர். அவர் பேசுவதும் பண்டிதர்களின் உயர் நடையிலேயே இருந்தது. ஆனால் காதம்பரி மாதவனுக்கு உயரிய இலக்கியத்தைக் கூறி புரியும் படி எளிய நடையில் கூறி அவனை மகிழ வைத்தது. அவர் மனதை மாற்றி விட்டது. இலக்கியத்தை ரசிக்க ஒரு எல்லையை வரையறுக்கக் கூடாது என்பதை காதம்பரியின் செயலால் தெரிந்து கொண்டார். அதனால் மனம் மாறி அவரே மாதவனுக்குப் புரியும் விதத்தில் கிருஷ்ண லீலா தரங்கிணி சுலோகம் ஒன்றை விளக்கினார்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# பிள்ளையார் அப்பனே!

நீங்கள் ஒரு புதிய வேலையைத் தொடங்கும் போது பிள்ளையாராகிய விநாயகப் பெருமானைத்தானே முதலில் வழிபடுகிறீர்கள். இதனால் நம் வேலையில் நாம் வெற்றி பெறு வோம் என்று நம்புகிறோம்.

ஆனைமுகத்தோனும் பானை வயிறுமாகத் தோற்றமளிக்கும் விநாய கரின் பிறந்த நாளை ஒவ்வொரு ஆண்டிலும் கொண்டாடுவது போல இந்த ஆண்டிலும் ஆகஸ்ட் மாதத்தில் கொண்டாடுகிறோம். இதை நாம் விநாயக சதுர்த்தி எனக் கூறுகிறோம். இந்தியா முழுவதிலும் கொண்டாடப் படும் இது மகாராஷ்டிர மாநிலத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

மகாராஷ்டிரத்தில் ஆவணி மாத சுக்கிலபக்ஷத்து சதுர்த்தியன்று இந்த விநாயகர் விழா ஆரம்பமாகிறது. இதை பத்து நாட்கள் கொண்டாடி விழாவின் பதினொன்றாவது நாளான அனந்த சதுர்த்தசியன்று முடிக்கி றார்கள். வீடுகளில் விநாயகரின் சிறு உருவங்கள் வைத்து பூஜை செய் கிறார்கள். பொது இடங்களில் அந் தந்தப் பகுதி மக்கள் விநாயகரின் பெரிய சிலைகளை வைத்து பூஜை செய்கிறார்கள். இச்சிலைகளில் சில முப்பது நாற்பது அடிகள் உயரம் கூட இருக்கும்.

விழாவின் கடைசி நாளான அனந்த சதுர்த்தசியன்று இச்சிலை களை ஊர்வலமாக எடுத்துப் போய் கடலிலோ பெரிய நீர் நிலைகளிலோ போட்டுக் கரைக்கிறார்கள். இச் சிலைகள் அலங்கார வண்டிகளில் மேளதாளத்துடன் கொண்டு செல்லப் படுகின்றன. பக்தர்கள் அவற்றின் முன் ஆடிப்பாடிக் கொண்டு செல் கிறார்கள். மும்பையில் இவ் விழாவின் போது இத்தகைய காட்சிகள் சர்வ சாதாரணம். ஹைதரா பாதில் கொண்டாடப்படும் சிலையின் உயரம் முப்பது அடிக்கும் மேலானது.



பிள்ளையாருக்குப் பிடித்தமானது கொழுக் கட்டை எனப்படும் மோதகம். இது இனிப் பான தின்பண்டம். அரிசி மாவால் தயாரிக்

கப்பட்ட கிண்ணத்தில் வெல்லத் தாலும் தேங்காய்த் துருவலாலும் தயாரிக்கப்பட்ட பூரணத்தை வைத்து மூடி வேக்காட்டில் வைத்து எடுத்தால் மோதகமாகிவிடும். விநாயக சதுர்த்தி யன்று இதையும் லட்டுவையும் மற்றும் பல தின்பண்டங்களையும் விநாயகருக்கு நிவேதனமாகப் படைக்கிறார்கள்.

விநாயக சதுர்த்தி நம் நாட்டின் பல பாகங்களில் பல விதங்களில் கொண்டாடப்படுகிறது. உத்திர பிரதேசத்தில் அந்நாளில் பெண்கள் பட்டினியாக இருந்து விட்டு சந்தி ரனைப் பார்த்த பிறகே சாப்பிடுகி றார்கள். கர்நாடகத்தில் இது கௌரி கணேசஹப்ப என்று கொண்டாடப் படுகிறது. தமிழ் நாட்டில் ஒவ்வொரு வீட்டிலும் களிமண்ணாலான பிள்ளையாரை வாங்கி பூஜை செய்து கொழுக்கட்டை சமர்ப்பிக்கிறார்கள். அண்மையில் சில ஆண்டுகளாக பொது இடங்களில் பெரிய விநாயகர் சிலைகளை வைத்து பூஜை செய்யும் முறை நாடெங்கும் பரவி விட்டது.

**பொது இடங்களில் விநாயகர் பூஜை**

நம் நாடு ஆங்கிலேயரின் ஆட்சி காலத்தில் எவ்வித சலனமும் இல் லாது சோர்வுற்று இருந்தது. 1844ல் பாலகங்காதர திலகர் நாட்டு மக்களை ஓரிடத்தில் கூட வைத்து தேசீய உணர்ச்சியைத் தட்டி எழுப்ப மகா ராஷ்டிரத்தில் பொது இடங்களில் விநாயகர் பூஜை என்று ஆரம்பித்து வைத்தார். மக்களிடையே இது நாட்டுப் பற்றையும் ஒற்றுமை யையும் வளர்த்தது. நம் பண்பாட்டின் மேன்மையை உணர்த்தியது. தேசீய கீதங்களும் நாட்டுப் பாடல்களும் பாடப்பட்டன.



### உங்களுக்குத் தெரியுமா?

★ யானைகளுக்கு அறிவு அதிகம். அதனால் யானை முகம் கொண்ட விநாயகர் அறிவுக் களஞ்சியம் எனப் போற்றப்படுகிறார்.

★ யானையின் தலை மட்டுமே 'ஓம்' என்ற வடிவைப் பெற்றுள்ளது.

★ யானை முகத்தையும் பெருத்த உடலையும் கொண்ட விநாயகரின் வாகனம் சிறிய உடலை கொண்ட மூஞ்சூறு என்பது ஆச்சரியமாக இல்லையா?

★ விநாயகர் உருவில் யானைத் தலையையும், மனித உடலையும், வாகனமாகிய சிறு மூஞ்சூறையும் கண்டு, கடவுளின் படைப்பில் சிறிது, பெரிது என்றில்லாமல் எல்லாம் சமமே என அறிகிறோம்



# தலை போன கதை!

பிள்ளையாருக்கு யானைத்தலை எப்படி வந்தது என்று தெரியுமா? இது பற்றிப் பல கதைகள் வழக்கில் உள்ளன. அவற்றில் ஒன்று இது.

பார்வதி விநாயகரைப் பெற்றதும் தன் குழந்தையைக் கண்டு ஆசீர்வதிக்கும்படி எல்லா தேவ தேவதைகளுக்கும் அழைப்பை அனுப்பினாராம். எல்லா தேவர்களும் வந்து பிள்ளையாரை ஆசீர்வதித்தார்கள். ஆனால் சனீஸ்வரன் மட்டும் வரவில்லை.

பார்வதி அவரை வரவழைத்து தன் மகனைக் கண்டு ஆசீர்வதிக்கும்படிக் கூறவே அவரோ ''நான் யாரைப் பார்த்தாலும் அவரது தலை வெடித்துவிடும். அப்படி ஒரு சாபம் எனக்குக் கிடைத்திருக்கிறது. அதனால் உங்கள் மகனைக் கண்டு ஆசி கூற முடியாது'' என்றார். பார்வதியோ ''அதெல்லாம் இல்லை. நீங்கள் என் மகனைப் பார்த்து ஆசீர்வதியுங்கள்'' என்றாள்.

## பிள்ளையாரைப் பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும்?

சற்று முயன்று பாருங்களேன்

1. விநாயகரின் சகோதரர் யார்?
2. மகாபாரதத்தை எழுத வந்த விநாயகருக்கு யார் அதனைக் கூறி எழுத வைத்தார்?
3. விநாயக சதுர்த்தி எப்போது கொண்டாடப் படுகிறது?
4. விநாயகருக்கு பிடிக்கும் தின்பண்டம் எது?
5. விநாயகச் சதுர்த்தியின் பதினோறாவது நாளை என்ன பெயரில் அழைக்கிறார்கள்?.
6. விநாயகரின் தலை எந்தச் சின்னத்தைக் காட்டுகிறது?
7. விநாயக சதுர்த்தியைக் கொண்டாடி நாட்டுப்பற்றையும் ஒற்றுமையையும் வளர்க்க வழி வகுத்தவர் யார்?
8. விநாயகரின் ஒரு தந்தத்தை ஒடித்தவர் யார்?

அவரும் வேறு வழியின்றி பிள்ளையாரைப் பார்த்தார். மறு விநாடியே பிள்ளையாரின் தலை வெடித்து சுக்கு நூறாகியது. அதனால் பிள்ளையாருக்கு யானையின் தலை பொருத்தப்படவே பார்வதிதேவி ஆறுதல் அடைந்தார்.

பிள்ளையாரின் தலை பற்றிய இன்னொரு கதை இது தான். பார்வதிதேவி களி மண்ணால் ஒரு சிறுவனின் உருவத்தைச் செய்து வாசலில் நிறுத்தி அதனிடம் ''நான் குளிக்க உள்ளே போகிறேன். யார் வந்தாலும் வீட்டிற்குள் விடாதே'' எனக் கூறி விட்டுச் சென்றார். சற்று நேரத்திற்குப் பின் சிவபிரான் வரவே களிமண்ணாலான அச் சிறுவன் அவரைத் தடுத்து உள்ளே போக விட வில்லை. அதனால் கோபம் கொண்ட சிவபிரான் அச் சிறுவனின் தலையைக் கிள்ளி எறிந்து விட்டார். குளித்து விட்டு வந்த பார்வதி தான் காவலுக்கு வைத்த சிறுவன் தலை இல்லாது இருப்பதைக் கண்டு கண்ணீர் வடித்தார். அது கண்டு பார்வதிக்கு ஆறுதல் அளிக்க ஒரு யானையின் தலையைக்கொண்டு வந்து அச்சிறுவனின் உடலில் பொறுத்தப்பட்டதாம்.

## வண்ண விளையாட்டு

இந்த விநாயகரின் படத்திற்கு பல வண்ணங்கள் கொடுத்து அழகுற விளங்கச் செய்யுங்கள்



## உங்களுக்குத் தெரியுமா?
### விடைகள்

1. சுப்பிரமணியர்
2. வியாச முனிவர்
3. ஆவணி மாத சுக்கிலபக்ஷ சதுர்த்தி
4. கொழுக்கட்டை (மோதகம்)
5. அனந்த சதுர்தசி
6. ஓம் என்ற சின்னம்
7. பாலகங்காதர திலகர்
8. பரசுராமர்





# மகிழ்ச்சி கிடைத்தது!

ஹோட்ஜா நசீருத்தீன் ஒரு நாள் நகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு மரத்தின் கீழ் ஒருவன் கவலையுடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவர் அவனருகே போய் ''என்னப்பா விஷயம்? என்ன கவலை உனக்கு?'' என்று விசாரித்தார். அவனும் ''எனக்கு வாழப் பிடிக்கவே இல்லை. என்னிடம் ஏராளமாகப் பணம் இருந்தும் சுகம் கிடைக்கவில்லை. ஒரே விரக்தியாக இருக்கிறது. எங்கேயாவது எனக்கு மகிழ்ச்சி கிடைக்குமா என்று எண்ணியே கால் போன போக்கில் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

அப்போது நசீருத்தீன் சட்டெனப் பாய்ந்து அவன் தன் பின்னால் வைத்திருந்த பையை எடுத்துக் கொண்டு வெகு வேகமாகக் குறுக்கு வழியில் ஓடினார். அவரைப் பிடிக்க அந்த மனிதன் நேர் பாதையில் ஓடினான். குறுக்கு வழியில் சென்ற நசீருத்தீன் நேர் பாதையை ஓரிடத்தில் அடைந்து அந்த மனிதனின் பையை நேர் பாதையின் ஒரு ஓரத்தில் வைத்து விட்டு சற்று தூரத்தில் போய் உட்கார்ந்து கொண்டார்.

பையை இழந்தவன் நேர் பாதையில் ஓடி வந்தான். பாதையோரமாகத் தன் பை இருப்பதைக் கண்டு அதைக் கையில் எடுத்துக் கொண்டு ''இது பறி போய்விட்டது என்றே நினைத்தேன். மீண்டும் கிடைத்து விட்டது'' என உரக்கக் கூறி மகிழ்ந்து போனான். அப்போது நசீருத்தீன் அவனருகே சென்று ''இது மகிழ்ச்சி கிடைக்க ஒரு வழி. தெரிந்ததா?'' என்றார்.



# பாரதப் பண்பாடு- வரலாறு

ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

## 18. கல் சொல்லும் கதைகள்



அன்று சோமநாதர் பூங்காவிற்குச் செல்லவில்லை. ஆனால் சேகரும் சியாமளாவும் விட்டு விடுவார்களா? இரவில் சாப்பாட்டு மேஜையில் அமர்ந்து சாப்பிட்டு முடிந்ததும் சேகர் ''தாத்தா! இன்றைக்கு என்ன கதை சொல்லப் போகிறீர்கள்? நீங்கள் சொல்லும் கதைகள் எல்லாம் மிகவும் நன்றாக இருக்கின்றன'' என்றான்.

சோமநாதரும் ''இவை பழங் காலத்துக் கதைகள் என்றாலும் வர லாற்று உண்மைகள் இவற்றில் பதிந் துள்ளன. நீண்ட காலமாகப் பலர் வாயிலாக இக்கதைகள் கேட்டுக் கேட்டு வந்திருப்பதால் சில சம்ப வங்கள் மிகைப் படுத்தப்பட்டுக் கூறப் பட்டும் இருக்கலாம். ஆயினும் அவற்றில் வரலாற்று உண்மைகள் உள்ளன என்பதை மறுக்க முடியாது'' என்றார்.

அப்போது சேகரின் தாயாரும் ''ஆமாம் எனக்குக் கூட அவ்வப் போது புரி ஜகன்நாதர் கோவில், கன்னியாகுமரிக் கோவில், மதுரைக் கோவில் ஆகியவை பற்றிக் கூறப் படும் பழங்கதைகளில் சில சந் தேகங்கள் தோன்றுகின்றன. அதனால் அவற்றில் எது உண்மை. எது கற்பனை



என்று தெரியாமல் விழிக்கிறேன்'' என்றாள்.

சோமநாதரும் ''இந்தப் பழங்கால கதைகள் எல்லாம் ஒருவர் சொன்னதைக் கேட்டு கொண்டு மற்றவர் வேறொருவருக்குச் சொல்லி வந்தவை. அதனால் இடையிடையே மாற்றங்கள் செய்யப்படுவது இயல்பே. அதனால் தான் சில விஷயங்கள் நம்ப முடியாமல் இருக்கின்றன'' என்றார்.

அப்போது சேகர் ''தாத்தா! வரலாற்று உண்மையும் மிகைப்படுத்தப்பட்ட சம்பவங்களும் கொண்ட ஏதாவது ஓர் உதாரணத்தைக் கூறுகிறீர்களா?'' என்று கேட்டான். சோமநாதரும் ''ஆகா! சொல்கிறேன். வாரணாசி எனப்படும் காசியின் கதை தான் அது'' என்று கூறிச் சொல்லத் தொடங்கினார்.

''காசி என்ற வாரணாசி நகரம் உலகிலேயே மிகப் பழமையான நகரம் என்று கூறலாம். இங்கு தான் புகழ்பெற்ற விசுவநாதர் ஆலயம் உள்ளது. இது சிவன் கோவில். இந்த நகரின் மன்னன் திவோதாசன். ஏதோ ஒரு காரணமாக சிவபிரான் அவன் மீது கோபம் கொண்டு அந்த நகரத்தை விட்டு வெளியேறினார். தான் அந்த நகரை விட்டுப் போய் விட்டால் மன்னன் படாத கஷ்டங்கள் படுவானென சிவபிரான் எண்ணிவிட்டார். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. மக்கள் எப்போதும் போல எவ்விதக் குறையும் இன்றி இருந்தார்கள். ஏனெனில் மன்னன் அவர்களது குறைகளைப் போக்கி அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்துக் கொண்டிருந்தான். இப்படியே பல ஆண்டுகள் கழிந்தன. சிவபெருமான் இல்லாத குறை மன்னனையும், மக்களையும், வெகுவாக உணர வைத்தது. என்ன தான் இகலோக சுகங்கள் கிடைத்தாலும், பரலோகத்திற்குச் செல்ல பகவானிடம் பக்தி கொள்வது தானே வழி! இதை எண்ணி, எண்ணி

மன்னனும், மக்களும் மனம் உருகி சிவபிரானைத் துதிக்கலானார்கள். சிவபிரானும் கருணை கொண்டு காசி நகருக்குத் திரும்பி வந்தார்.''

இவ்வாறு கூறி சோமநாதர் நிறுத்தியதும் சேகர் ''இதில் ஏதாவது மறைந்திருக்கிறதா?'' என்று கேட்டான்.

அவரும் ''ஆமாம். ஒரு விஷயம் உள்ளது. காசியில் கொஞ்ச காலத்திற்கு புத்தமதம் தலை தூக்கி நின்றது. அதனால் வழக்கமாக சிவபிரானுக்குச் செய்யப்படும் வழிபாடுகள் குறையலாயின. புத்தமதம் வாழ்க்கை முடிந்ததும் இறைவனடியை ஒருவன் சேருவான் என்பதை நம்பாதது. அதனால் அந்நகர மக்களுக்கு அம்மதத்தின் மீது வைத்த நம்பிக்கை போய் விட்டது. யாவரும் மீண்டும் ஹிந்து மதத்தையே நம்பலானார்கள். இதைக் குறிப்பது தான் சிவபெருமான் காசிக்குத் திரும்பி வந்த சம்பவம்'' என்றார்.

அப்போது சேகர் ''ஓ! இதுவா விஷயம்! நாம் பழங்காலக் கதைகள் என்று கூறி எந்தக் கதையையும் ஒதுக்கி விடக் கூடாது. அவற்றோடு வரலாற்று நிகழ்ச்சிகளையும் இணைத்துப் பார்க்க வேண்டும்'' என்றான்.

சோமநாதரும் ''ஆம். பழங்காலக் கதைகளை முதலில் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். அப்போது தான் அவற்றில் வரலாற்று சம்பவங்களை இணைத்துப் பார்க்க முடியும். அது மட்டுமல்ல, மக்களின் அக்காலத்திய சமுதாய வாழ்க்கை, மனநிலை முதலியவற்றையும் அவற்றில் காணலாம். புரி ஜகன்நாதரின் கதை நினைவிருக்கிறதா? அதில் ஒரு அந்தணன் ஒரு மலைச்சாதிப் பெண்ணை மணந்தான் என்றும் அவர்களது சந்ததியினரே அக்கோவிலின் அர்ச்சகர்களாகத் தொடர்ந்து இருந்து வருகிறார்கள் என்றும் கூறப்பட்டது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டு மக்கள் மலைச் சாதியினரைத் தாழ்ந்தவர்கள் என்று பாகுபடுத்தாமல் நடந்து கொண்டனர். ஆனால்



இன்றோ நிலைமை அப்படி இல்லையே'' என்று கூறிப்பெரு மூச்சு விட்டார்.

இதன் பிறகு அவர் ''மதுரை மீனாட்சி அம்மனைப் பற்றிக் கூறு கிறேன். அவள் மதுரையின் அரச குமாரி. அவளை மணக்க சுற்றிலு மிருந்த நாடுகளின் அரசகுமாரர்கள் போட்டி போட்டனர். ஆனால் அவள் அவர்களில் யாரையுமே மணக்க முடி யாது எனக் கூறி விடவே அவர்கள் ஒன்று சேர்ந்து மதுரையின் மீது படை எடுத்தனர். ஆனால் மீனாட்சி அவர் களைத் தோற்கடித்து அழித்தாள். அந்த மாதிரிப் பழங்காலக் கதைகள் எவ் வளவோ கதைகள் உள்ளன'' என்றார்.

சியாமளாவும் சேகரும் ''பல கதை களா? இன்னும் ஒரு கதை சொல் லுங்கள்'' எனவே அவர் மேலும் ஒரு கதையைக் கூறினார்.

''உங்களுக்கு ஒரிஸ்ஸா மாநிலத் திலுள்ள கோனார்க் சூரிய தேவர் ஆலயம் பற்றித் தெரிந்திருக்குமே. கலிங்க மன்னர் நரசிம்மதேவர் கோனார்க்கில் சூரிய தேவரின் ஆலயத்தை நிர்மாணிக்க பனி ரெண்டாயிரம் சிற்பிகளையும் பொறியாளர்களையும், தொழி லாளிகளையும் நியமித்தார். அவர்கள் பனிரெண்டு ஆண்டுகள் தொடர்ந்து உழைத்து அடுக் கடுக்காக ஆலயத்தைக் கட்டி னார்கள். இருநூறடி உயரக் கற்கள் மிக உயரத்தில் ஏற்றப்பட்டது அதிசயத்திலும் அதிசயமே.

ஆலய நிர்மாணம் முடிவடையும் நிலையை அடைந்து விட்டது. மேலே சிறப்பாக வடிவாக்கப்பட்ட கோபுர கும்பத்தை ஏற்ற வேண்டியது தான் மிஞ்சி இருந்த வேலை. அந்த கும்பத்தை ஏற்றும் வழி அவர் களுக்குத் தெரியவில்லை. மன்னனோ ஆலய நிர்மாணத்தை விரைவில் முடிக்கத்துடியாய்த் துடித்தான்.

அவன் தலைமைச் சிற்பியிடம் ''நீ மறுநாள் காலைக்குள் கும்பத்தை மேலே ஏற்றி அந்த நிர்மாண வேலையை முடித்து விடவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் நான் என்ன தண்டனை கொடுப்பேனோ, தெரியாது'' என எச்சரித்தான்.

அந்த சிற்பி விஷ்ணு மகாரானா என்ன செய்வதென்று திகைத்தான். அப்போது ஒரு இளைஞன் அவன் அருகே வந்தான். அவன் வேறு



யாருமல்ல, விஷ்ணுவின் மகனே. அவன் பெயர் தர்மபாதன். சிறு குழந்தையாக அவன் இருக்கையில் விஷ்ணு அவனை விட்டுப் பிரிந்து வந்து விட்டான். தர்மபாதன் தன் தந்தையின் புகழ் கேட்டு தேடி வந்து அவனைக் கண்டான்.

அப்போது தந்தையின் முன்னுள்ள பிரச்சினை என்ன என்று தெரிந்தது. அவன் அந்த சிறப்பு கோபுர கும்பத்தை எப்படி மேலே ஏற்ற வேண்டும் என்பதைக் கூறினான். உடனே யாவரும் அவன் கூறிய படியே கோபுர கும்பத்தை மேலே ஏற்றி ஆலய நிர்மாணத்தை முடித்தார்கள்.

யாவரும் வேலை முடிந்தது பற்றி மகிழ்ந்தாலும் அது ஒரு இளைஞன் கூறியதன் பேரில் தான் ஆலய நிர்மாண வேலை முடிவுற்றது என்பதை மன்னன் அறிந்தால் தமக்கு எவ்வளவு இகழ்ச்சி என்று தமக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள். இதை தர்மபாதன் கேட்டு விட்டான்.

அவ்வளவு தொழிலாளர்களும் இவ்வளவு காலமாக வேலை செய்து விட்டு பேரும் புகழும் இல்லாமல் போவதா என்று தர்மபாதன் யோசித்தான். தன்னால் அவர்களுக்கு அவமானம் ஏற்பட்டு கெட்ட பெயரும் வந்து விடக் கூடாதென்று எண்ணி அவன் அதே இரவில் பொங்கி வந்த கடலினுள் ஐக்கியமாகி விட்டான்.''

சோமநாதர் இக்கதையைக் கூறி ''இது பழங்காலத்துக் கதை தான். ஆனால் இதில் நீங்கள் வரலாற்றைக் காண்கிறீர்கள். சிற்பக்கலையின் உயர்வை அறிகிறீர்கள். யாவற்றிலும் மேலாக மனிதனின் உயர்ந்த பண்புகளை குறிப்பாகத் தியாகத்தைப் பற்றி அறிகிறீர்கள்'' என்றார்.

சேகரும், சியாமளாவும் இக்கதையைக் கேட்டு ''ஆமாம் தாத்தா! நீங்கள் கூறியது போல வரலாற்று நிகழ்ச்சிகளும் அக்காலத்து நம் நாட்டவர்களின் எண்ணங்களும் என்னவென்று தெரிய வருகின்றன. இப்படியே இனி நாங்கள் ஒவ்வொரு கதையையும் அலசிப் பார்ப்போம். அப்போது அவற்றின் உயர்வு தெரியவரும்'' என்று கூறினார்கள்.



# ஓரிஸ்ஸாவின் ஒடிஸ்ஸி

நாட்டியம் பற்றி எழுதி வழி வகுத்தவர் நம் நாட்டில் பரதமுனிவர். பரத நாட்டியம், கதக்களி, கூசிபுடி, ஒடிஸ்ஸி, கதக், மணிப்புரி என நாட்டியத்தில் பல முறைகளுள்ளதை நாம் காணலாம். இன்றைய ஒரிஸ்ஸா பகுதியில் கையாளப்படும் நாட்டிய முறை தான் ஒடிஸ்ஸி. நாட்டியத்திற்கு வழிமுறைகள் வகுத்த பரத முனிவர் காலத்தை கி.மு 200 எனலாம்.

ஒடிஸ்ஸி முறை நாட்டியம் முதலில் அப்பகுதி ஆலயங்களில் ஆடப்பட்டு வந்தது. இந்த நடன முறை கி.பி 700ல் தான் ஆலயங்களில் ஆடும் மஹரிகள் எனப்படுபவர்களால் பிரபலப்படுத்தப்பட்டது. கோனார்க்கின் சூரிய தேவர் ஆலயத்தில் இம்முறையின் நடன சிற்பச்சிலைகள் பலவற்றைக் காணலாம்.

இளைஞர்கள் 16வது நூற்றாண்டில் பெண் வேடம் அணிந்து ஆலயங்களில் நடனமாடி வந்தார்கள். இம் முறையை கோடி புவா அல்லது அகாடபிலா என்ற பெயரில் குறிப்பிட்டார்கள். அநேகமாக இப்பகுதியின் எல்லா ஆலயங்களிலும் நடனமாடுவதற்கு என்று 'நடமந்திரங்கள்' பல நடன சிற்பச்சிலைகளுடன் அமைக்கப்பட்டிருந்தன. இங்கு பல இசைக்கருவிகளும் இருந்தன.










ஒடிஸ்ஸி நடனத்தில் பாடல்கள் எல்லாம் ஜெயதேவரின் கீதகோவிந்தத்திலிருந்து எடுக்கப்பட்டவை. ஜெயதேவர் கி.பி1200ல் வாழ்ந்த மாபெரும் கவிஞர். இவரது பாடல்கள் ராதா-கிருஷ்ணரின் கதையை அடிப்படையாகக் கொண்டவை.




ஒரு தட்டத்தின் விளிம்பில் தன் பாதங்களை வைத்து அதனை முறையாக நடனமாடுபவர் நகர்த்திக் கொண்டு செல்வது ஒடிஸ்ஸி நடனக்கலையில் ஒரு சிறப்பு அம்சமாகும். சிலர் இந்நடனத்தின் போது தம் கைகளில் தட்டுகளை ஏந்திக் கொண்டும் ஆடுவதும் உண்டு.






ஒடிஸ்ஸி நடனக்கலைஞர்கள் உள்ளூர்களில் தயாரிக்கப்படும் வண்ணப்பட்டாடைகளை அணிகிறார்கள். இங்கேயே தயாரிக்கப்படும் பிலிகிரி முறை வெள்ளி, தங்கநகைகளை அணிந்து ஆடுகிறார்கள்.




இந்திய நடனங்களிலெல்லாம் நிருத்தம், அபிநயம் என்ற இரு முக்கிய அம்சங்கள் உண்டு. இவை ஒடிஸ்ஸியிலும் இடம் பெற்றுள்ளன. கைகளாலும் முகபாவங்களாலும் உணர்ச்சிகளை இவற்றில் நடன கலைஞர்கள் வெளிப்படுத்தித் தம் திறமையைக் காட்டுகிறார்கள்.






ஆண்டு தோறும் ஒரிஸ்ஸாவில் கோனார்க் சூரியதேவரின் ஆலய வளாகத்தில் நடத்தப்படும் நடன விழா மிகச் சிறப்பானது.



# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள்



கிருஷ்ணதேவராயரின் அரச சபையிலிருந்த விகடகவி தெனாலி ராமனைப் பற்றி அறியாதவர் யாருமே இல்லை. அவர் சாதுரியமாகப் பேசி எல்லோரையும் சிரிக்க வைத்து விடுபவர். இக்கட்டமான சமயங்களில் தன் பேச்சால் அவர் நிலைமையை எளிதில் சமாளித்து விடுவார்.

ஒரு முறை கிருஷ்ண தேவராயர் அவர் மீது கடுங்கோபம் கொண்டார். அதனால் அவர் ''இனி உன் முகமே என் கண்ணில் படக் கூடாது. இங்கிருந்து போய் விடு'' என்று கட்டளை இட்டார்.





தெனாலிராமன் மீது பொறாமை கொண்ட அரசவைப் பிரமுகர்கள் இந்த உத்தரவு கேட்டு மகிழ்ந்து போனார்கள். இனி தெனாலிராமன் தலை தூக்க முடியாது என அவர்கள் எண்ணினார்கள். இனி தெனாலிராமன் என்ன செய்வான் என்று அவர்கள் பார்க்கலானார்கள்.

தெனாலிராமன் அது பற்றிக் கவலைப்படவில்லை. மறு நாள் அவன் அரச சபைக்குப் போகும் முன் ஒரு பானையை வாங்கிக் கொண்டு சென்றான்.





தெனாலிராமன் அரச சபைக்குள் வந்தது கண்டு அங்கிருந்தவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். மன்னரின் கோபம் இன்னமும் தணியாததால் தெனாலிராமன் நாடு கடத்தப்படுவான் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.



தெனாலிராமன் தான் கொண்டு வந்த பானையை எடுத்து தலையில் கவிழ்த்துத் தன் முகம் தெரியாதவாறு செய்து கொண்டு தான் வழக்கமாக அமரும் இருக்கையில் அமர்ந்தான்.



அரச சபையில் இருந்த எல்லோரும் இனி மேல் என்ன நடக்கும் என்று பார்க்கலானார்கள். மன்னர் வந்ததும் கோபமாக தெனாலிராமனிடம் ''என் கட்டளை என்ன? ஏன் தலையில் பானையைக் கவிழ்த்துக் கொண்டு இங்கே வந்தாய்?'' என்று உறுமினார்.

அரசே! தங்களது கட்டளைப்படி தான் நான் நடந்து கொண்டிருக்கிறேன். என் முகமே தங்கள் கண்ணில் படக்கூடாது என்பது தானே தங்கள் கட்டளை! அதனால் என் முகம் தங்களுக்குத் தெரியக்கூடாது என்றே பானையைத் தலையில் கவிழ்த்துக் கொண்டு தங்கள் கண்ணில் முகம் தெரியாதபடி செய்து விட்டேன்'' என்றான். யாவரும் சிரித்தனர். மன்னரும் தெனாலிராமனை மன்னித்து விட்டார்.



## உத்திரப்பிரதேசத்துப் பழங்காலக் கதை

உத்திரப்பிரதேசம் இந்தியாவின் மாநிலங்களில் மிகப் பெரியது. இதன் பரப்பளவு 236286 சதுர கிலோ மீட்டர். இது அட்சரேகைகள் 24க்கும் 31க்குமிடையிலும் தீர்க்க ரேகைகள் 77க்கும் 84க்குமிடையிலும் அமைந்துள்ளது. பரப்பளவில் இது பாதிப்பிரான்ஸ் நாடு, இங்கிலாந்தை விடச் சற்றுப் பெரியது. மிக அதிக மக்கள் தொகையான 13.21 கோடியைக் கொண்ட மாநிலம் இது.

இதில் பேசப்படும் வட்டார மொழி 5 கிலோ மீட்டருக்கு ஒன்றாகக் கேட்கப்பட்டாலும் ஹிந்தி தான் பொது மொழி. இம்மாநிலத்தில் கௌர்வி, ஹரியான்வி, ப்ரிஜ், கன்னௌஜி, புண்டேலி, கடிபோலி, ப்ரஜ் பாஷா, போஸ்கா, அவதி, போஜ்புரி, காஹ்வாலி, குமோனி என்பன ஹிந்தியிலிருந்து திரிந்த வட்டார மொழிகளில் சில.

# திடீர் சோதிடர்!

சாவித்திரியம்மா தன் பேத்தி சமேலியை மணம் செய்து கொடுத்து விட்டுத் தன் கிராமத்தில் நிம்மதியாக வாழ்ந்து வந்தாள். சமேலியின் கணவன் பதிங்கா. இளைஞன். சமேலியும் அவனும் சுகமாக வாழ்வார்கள் என சாவித்திரியம்மா எண்ணி மகிழ்ந்தாள்.

ஒரு நாள் சாவித்திரியம்மாவைக் காண சமேலியும் அவள் கணவன் பதிங்காவும் வந்தனர். சாவித்திரி உடனே பால் வாங்கி வர பாலேஸர் என்ற சிறுவனை அனுப்பினாள். சமையலுக்கான ஏற்பாடுகளையும் உடனே



செய்தாள். சமேலி வீட்டிற்குள் சென்றாள். பதிங்கா அந்த வீட்டை ஒரு முறை சுற்றிப் பார்த்தான். சாய்வான ஓட்டுக் கூரை. அதைத் தாங்க மரத் தூண்கள். சுவரில் சிவப்பும் வெள்ளையுமாக திருஷ்டி கழிக்கக் கோடுகள் போடப் பட்டிருந்தன.

இவற்றை எல்லாம் பார்த்து விட்டு வீட்டின் பின்புறம் சென்று பார்க்கலானான். அப்போது சமையலறையிலிருந்து சத்தம் வரவே அவன் வீட்டினுள் சென்றான்.

சாவித்திரியம்மா ஓடியாடி சமையலைச் செய்து முடித்தாள். சாப்பாட்டுத் தட்டையும் கிண்ணங்களையும் எடுத்து வைத்து பெரிய கிண்ணியில் சுண்டக் காய்ச்சிய பாலை வார்த்து நிரப்பினாள். மற்றதில் 'சாக்' எனப்படும் காய்கறியைப் போட்டாள். மற்றொன்றில் 'தால்' என்பதை வைத்தாள். பிறகு சில ரொட்டிகளும் உருளைக் கிழங்குக் கறியையும் சாப்பாட்டுத் தட்டுகளில் வைத்து அவர்களிருவரையும் சாப்பிட வரும்படி அழைத்தாள்.

தன் தட்டில் ஐந்து ரொட்டிகளும் சமேலியின் தட்டில் நான்கு ரொட்டிகளும் வைக்கப்பட்டிருப்பதை பதிங்கா கவனித்தான். உடனே அவன் ''அம்மா! உங்களுக்கென ரொட்டி ஏன் எடுத்து வைத்துக் கொள்ளவில்லை?'' என்று கேட்டான். ஏனெனில் சாவித்திரியம்மா ஒன்பது ரொட்டிகள் மட்டுமே சுட்டு வைத்திருந்ததை அவன் முன்பே கவனித்திருந்தான்.

ஆனால் சாவித்திரியம்மாவோ

## உணவு வகைகள்



உத்திரப்பிரதேச விவசாயப் பயிர்கள் கோதுமை, பருப்பு வகைகள், பட்டாணி, கரும்பு, கடுகு முதலியன. எனவே, இம்மாநிலத்தினரின் உணவு இவற்றைக் கொண்டு தான் தயாரிக்கப்படுகிறது.

கோடையில் நெய், பூசணி, புடலை போன்ற நீர்ச்சத்துக் காய்கள், வெண்டைக்காய், சுரைக்காய் போன்றவை உணவில் சேர்க்கப் படுகின்றன. மண்சட்டியில் பாலைச்சுட வைத்து அதில் வெல்லம் போட்டுக் குடிப்பது பலரது பானம். கட்டித் தயிரையும் சிலர் உட்கொள்வதும் உண்டு. குளிர் காலத்தில் உருளைக்கிழங்கு, காலிப்ளவர், கீரை, கடுகு இலை, சோயா இலை, பசலை என்பனவற்றை மசித்து உண்கிறார்கள். சோள ரொட்டிகள் உடம்பைக் கதகதப்பாக வைத்துக் கொள்ள சாப்பிடப் படுகின்றன. சாப்பாட்டில் கரும்புச் சாறைக் கொண்டு தயாரிக்கப்பட்ட 'கீர்' (பாயசம்) சிறப்பானது.



விழாக்களின் போது லட்டு, சக்கர் பரா, பர்ப்பி, முதலிய இனிப்பு வகைகள் சிறப்பாகத் தயாரிக்கப்படுகின்றன. ஹோலியின் போது தயாரிக்கப்படும் பூந்தி லட்டுகளில் பங்க் எனப்படும் போதைப் பொருள் சேர்க்கப்படுகிறது.

வண்ணங்கள் சேர்த்து பூரியும் புலாவும் தயாரிக்கப்படுகின்றன.





''நான் எனக்கென சமையலறையில் ரொட்டிகளை எடுத்து வைத்திருக்கிறேன். நீங்கள் சாப்பிடுங்கள்'' என்றாள். பதிங்காவோ ''நான் சோதிடன். பொய் சொல்லாதீர்கள். நான் கண்டு பிடித்து விட்டேன்'' என்றான் சிரித்துக் கொண்டே. அப்போது சமேலி ''அம்மா மொத்தம் எவ்வளவு ரொட்டிகள் செய்தாளென்று சோதிடப்புலியான நீங்கள் சொல்லுங்கள் பார்க்கலாம்'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

பதிங்காவும் கண்களை மூடிக் கொண்டு மந்திரங்கள் கூறுபவன் போல ஏதோ முணு முணுத்து ''மொத்தம் ஒன்பதே'' என்றான். சமேலி தட்டத்தைப் பார்த்தாள். அதில் ஒன்று கூட இல்லை. சாவித்திரியும் ''நான் சாதம் சாப்பிட்டுக் கொள்கிறேன். நீங்கள் ரொட்டிகளைச் சாப்



## வழக்கமான கலை, கைவினைப் பொருள்கள்

உத்திரப்பிரதேசம் பட்டுப்புடவைகளுக்குப் பெயர் பெற்றது. இவற்றில் பெரும் பாலானவை வாரணாசியிலிருந்தும் முபாரக்பூரிலிருந்தும் வருகின்றன. முபாரக்பூர் நேர்த்தியான பூ வேலைகள் கொண்ட மெல்லிய புடவை களுக்குப் பெயர் போனது.

விழாக்களின் போது பெண்கள் தரை மீதும் சுவர்களிலும் அழகிய கோலங் களைப் போடுகிறார்கள். ரங்கோலி எனப்படும் இவற்றில் தாமரை போன்ற மலர்களும் ஸ்வஸ்திகா சின்னமும் சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இவை கோதுமை மாவால் தயாரிக்கப்பட்ட வண்ணப் பொடி களால் ஹோலிப் பண்டிகைகளின் போது போடப் படுகின்றன. இப்பொடிகளை குலால் என்கிறார்கள். அரிசி மாவி னாலும் இந்த வண்ணப் பொடிகள் தயாரிக்கப் படுகின்றன.



பிடுங்கள். அவை சூடு ஆறிவிடப் போகின்றன'' என்றாள். இந்த சம்பவம் பதிங்காவிற்கு 'சோதிடர்' என்ற பெயரை ஏற்படுத்தி விட்டது.

மறுநாள் மதிய உணவிற்குப் பின் சாவித்திரியும் சமேலியும் கோதுமை வைக்கோல் தண்டுகளைக் கொண்டு விசிறிகள் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது சலவைத் தொழிலாளி கல்லூ ஓடோடி வந்து சாவித்திரியிடம் ''என் கழுதை காணாமல் போய் விட்டது. உங்கள் மாப்பிள்ளையிடம் கேட்டு அது எங்கே இருக்கிறது என்று சொல்லுங்கள்'' என்று கெஞ்சினான்.

சாவித்திரியும் பதிங்காவிடம் அதைக் கூறி கல்லூவின் கழுதை எங்கே இருக்கிறது என சோதிடம் பார்த்துக் கூறும்படி வேண்டவே அவன் திகைத்துப் போனான். பிறகு அவன் சமாளித்துக் கொண்டு ''கழுதை கெட்டால் குட்டிச்சுவர் பக்கம் இருக்கும். அங்கே போய்ப் பார்'' என்றான். கல்லூவும் கிராமத்தில் ஒரு குட்டிச்சுவரருகே தன் கழுதையைக் கண்டு பிடித்து விட்டான். இதனால் பதிங்காவை மாபெரும் சோதிடர் என்று அவ்வூரார் புகழ்ந்தார்கள்.



## நவராத்திரி விழா

சித்திரை மாதத்தில் அதாவது ஏப்ரலில் உத்திரப்பிரதேச மக்கள் நவராத்திரியை துர்க்கா பூஜை செய்து கொண்டாடுகிறார்கள். நள்ளிரவில் இந்த வழிபாடு நடக்கிறது. விதவிதமான தின்பண்டங்களைத் தயாரித்து தேவிக்குப் படைக்கிறார்கள். இந்த வழிபாட்டை 'பாசியூரா' என்கிறார்கள். சிலர் விதவிதமான தின்பண்டங்களைத் தயாரித்து தேவியின் ஏழு திருஉருவங்களுக்குப் படைக்கிறார்கள். வீடுகளின் தலை வாசல்களில் வண்ணக் கோலங்கள் போடப்படுகின்றன.

அன்று மாலை பதிங்கா பானகம் குடித்துக் கொண்டிருந்த போது அந்நாட்டு சேனாதிபதி ஷேர்சிங் வந்து அவனிடம் ''என் குதிரைக் காணாமல் போய் விட்டது. அது எங்கே இருக்கிறது என சோதிடம் பார்த்துக் கூறுங்கள்'' என்றான்.

பதிங்கா வெலவெலத்துப் போனான்! இதென்ன சங்கடத்தில் மாட்டிக் கொண்டேனே என்று



எண்ணி அவன் ''குதிரையா? அது ஏதாவது ஒரு புல் கட்டினருகே இருக்கும்'' என்றான். சேனாதிபதியும் புல்கட்டுகள் வைக்கப்பட்டிருந்த இடங்களிளெல்லாம் தேடி முடிவில் ஒரு புல் கட்டருகே தன் குதிரை புல்லைத் தின்று கொண்டிருப்பதைக் கண்டான். இதனால் மகிழ்ந்து போய் சேனாதிபதி பதிங்காவிற்கு சில தங்க நாணயங்களைப் பரிசளித்து விட்டுச் சென்றான்.

பதிங்காவோ இன்னமும் என்னென்ன சங்கடங்கள் வருமோ எனப் பயந்து விரைவிலேயே அந்த கிராமத்தை விட்டுப் போய் விட நினைத்தான். இதை அவன் தன் மனைவியிடம் தெரிவிக்கவே அவளோ இன்னமும் சில நாட்கள் இருந்து விட்டுப் போகலாம் என்று கூறினாள்! ஆனால் பதிங்கா அதற்குச் சம்மதிக்க வில்லை.

அடுத்த நாள் அவன் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்த போது அரண்மனை யிலிருந்து ஒரு வீரன் வந்து பதிங்காவிடம் ''சோதிடரே! மகாராணியின் நவரத்தின மாலை காணாமல் போய் விட்டது. நீங்கள் வந்து கண்டு பிடித்துக் கொடுக்க வேண்டும். இது அரச கட்டளை'' என்றான்.

அரசகட்டளை என்றதும் நடு நடுங்கியவாறே பதிங்கா அரண்மனைக்குச் சென்றான். அங்கு அவன் ''மகாராணி நவரத்தின மாலையை எங்கே வைத்திருந்தார்?'' என்று கேட்டான். ''அவரது படுக்கையின் பக்கத்தில் மற்ற நகைகளோடு தான் அவர் வைத்திருந்தார். ஆனால் அந்த மாலை மட்டும் தான் காணவில்லை. மற்ற நகைகள் உள்ளன'' என்றாள். ஒரு பணிப்பெண். ''அப்படியானால் மகாராணி தூங்கும் போது மாலை திருடப்பட்டுள்ளது. அவர் அயர்ந்து தூங்கி சொப்பனம் கண்டு கொண்டு இருந்திருப்பார். ஸ்வப்னா! ஸ்வப்னா!!'' என்று பதிங்கா கனவைப்பற்றி எண்ணி உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தான்.

மகாராணியின் பணிப்பெண்களில் ஒருத்தியின் பெயர் ஸ்வப்னா. அவள் தான் நவரத்தின மாலையைத் திருடியவள். சோதிடர் தன் பெயரைக் கூறியது கேட்டு அவள் நடுநடுங்கித் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு மகாராணியிடம் மாலையைக் கொடுத்து

விட்டுத் தன்னை மன்னிக்கும்படி வேண்டினாள். பதிங்காவும் பெரு மூச்சு விட்ட வாறே தான் தப்பியதாக எண்ணி நிம்மதி அடைந்தான்.

அப்போது மன்னனே வந்து ''சோதிடப் புலியே! என் கைக்குள் என்ன இருக்கிறது என்று சரியாகச் சொல்லிவிட்டால் உனக்கு ஒரு கிராமத்தையே இனாமாகக் கொடுக்கிறேன். அதைச் சொல்லாவிட்டாலோ உனக்கு சோதிடமே தெரியாது எனத் தீர்மானித்து உன் தலையை மொட்டை அடித்து முகத்தில் கரும்புள்ளி செம்புள்ளி குத்தி கழுதை மீது உட்கார வைத்து ஊர்த்தெருக்களில் சுற்றி வரச் செய்வேன்'' என்றான்.

பதிங்கா பயந்து நடுநடுங்கிக் கொண்டிருக்கையில் மன்னன் தன் கைவிரல்களை மடக்கி அவன் முகத்தின் முன் காட்டினான். அவனோ பயந்து ''ஒரு உயிர் தங்களிடம் சிக்கித்துடிதுடித்துக் கொண்டிருக்கிறதே!'' என்று பதிங்கா தன்னைப் பற்றித் தான் மன்னனிடம் கூறினான். மன்னன் தன் கையைத்திறந்து பார்த்தான். அவனது உள்ளங்கையில் ஒரு விட்டில் பூச்சி துடிதுடித்துக் கொண்டிருந்தது.

மன்னனும் ''நீ உண்மையிலேயே சோதிடப் புலி தான்'' என்று கூறி பதிங்காவைப் பாராட்டி ஒரு கிராமத்தை இனாமாக அளித்தான். அந்த கிராமம் தன் மாமியாரின் ஊரிலிருந்து வெகு தூரம் தள்ளி இருந்ததால் மகிழ்ச்சியுடன் அதனை அவன் ஏற்று அங்கு தன் மனைவி சமேலியுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.



## சுற்றுலா இடங்கள்

உத்திரப்பிரதேசத்தில் பல புனித இடங்களும் கோடை வாசத்தலங்களும் சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்து இழுக்கின்றன. புனித நதிகளான கங்கையும் யமுனையும் இம் மாநிலத்தில் பாய்கின்றன. அயோத்தி, மத்ரா, பிருந்தாவன், முதலிய இடங்கள் பகவானின் அவதாரங்களான ராமர், கிருஷ்ணருடன் தொடர்பு கொண்டவை. வாராணசி புனிதத் தலமாயும் உயர் கல்விக்கான இருப்பிடமாகவும் விளங்கி வருகிறது. இங்கு கங்கையில் புனித நீராட உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் வருகிறார்கள்.

உலகப்புகழ் பெற்ற தாஜ்மஹல் இம்மாநிலத்து ஆக்ராவில் யமுனை நதிக்கரையில் உள்ளது. இதனை முகலாய மன்னர் ஷாஜஹான் தம் மனைவி மும்தாஜ் பேகத்தின் நினைவில் கட்டினார்.

ரிஷிகேசத்தருகே பாயும் கங்கையில் படகுகளை ஓட்டிப் பலரும் மகிழ்வதைக் காணலாம். பசுமை நிறைந்து அமைதியாக உள்ள கோர்பெட் தேசீயப் பூங்காவும் இந்த மாநிலத்தில் தான் உள்ளது.

# செய்திச்சுடர்

## முதன்முறையாக ரஷ்யாவில் கிரிக்கெட்

ரஷ்யாவில் மற்ற நாடுகளைப் போல கிரிக்கெட் விளையாடப்படுவதில்லை. ரஷ்யக் கிரிக்கெட் விளையாட்டு வீரர் எனயாரும் இல்லை. ஆனால் செண்ட் பீடர்ஸ் பர்க்கின் 17 வயதான அலெக்ஸி கோரோப்கின் என்ற இளைஞர் இங்கிலாந்தில் கெண்டின் டோவர் கல்லூரி டீமின் முக்கிய பௌலராக இருந்து 593 ஓவர்களில் 13 விக்கட்களைப் பற்றியவர். அண்மையில் XI கிளப்புடன் கல்லூரி டீம் விளையாடியதில் 24 ரன்கள் கொடுத்து 6 விக்கட்களைக் கைப்பற்றினார். விஸ்டென் அல் மனக்கில் இவரது பெயர் இடம் பெற்றுள்ளது. கிரிக்கெட் விளையாட்டை ரஷ்யாவில் பிரபலப்படுத்துவதே தம் குறிக்கோள் என அலெக்ஸி கூறுகிறார்.



## அதிர்ஷ்ட பொம்மைப் பெயர்கள்



கால்பந்தாட்ட ரசிகர்கள் அடுத்த 12 மாதங்களுக்கு நிக், காஜ், ஆடோ என்ற அதிர்ஷ்டகார உருவங்களை நினைத்துக் கொண்டே இருப்பார்கள். 2002ல் மே-ஜுன் மாதங்களில் நடக்கப் போகும் உலகக்கால்ப் பந்துப் போட்டிக்காக ரசிகர்கள் இப்பெயர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். உலகக் கால் பந்துப் போட்டி பெடரேஷன் விண்வெளி வீரர்கள் போலுள்ள இந்த உருவங்களைத் தேர்ந்தெடுத்துள்ளது. இவை மஞ்சள், நீலம், பழுப்பு ஆகிய நிறங்களில் உள்ளன.

## மிகப் பெரிய பணக்காரக் கிரிக்கெட் வீரர்



உலகிலே மிகப் பெரிய பணக்காரக் கிரிக்கெட் வீரர் யார் தெரியுமா? அவர் வேறு எந்த நாட்டவரும் அல்ல. நம் நாட்டு சசின் டெண்டுல்கர் தான். கிரிக்கெட்டினால் அவர் மாபெரும் பணக்காரராகி விட வில்லை. வேர்ல்ட்டெல் நிறுவனத்துடன் அவர் செய்து கொண்ட (1995லிருந்து இன்று வரையான) ஒப்பந்தம் அவருக்கு 80 கோடி ரூபாய்களைக் கொடுத்துள்ளது. முதல் காண்ட்ராக்ட் 24 கோடி. ஆனால் அது புதுப்பிக்கப்பட்ட பின் இவ்வளவுக்கு அது உயர்ந்தது. குளிர் பானங்கள் போன்ற விளம்பரங்களில் இவர் தோன்றி வருகிறார். பிரபல கிரிக்கெட் வீரர் என்பதால் வேர்ல்ட்டெல் இந்த ஒப்பந்தத்தை இவருடன் செய்து கொண்டது.

## குடும்பங்களிடையே விளையாட்டுப் போட்டி

ஹாக்கியில் நிகே நெல்லம்மா கோப்பை பரிசளிக்கப்படுவது பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? இல்லையே! 'கின்னஸ் புக்' கைப் பாருங்கள். தெரிந்து விடும். கர்நாடகா அம்மத்தியில் குடும்பங்களிடையே ஹாக்கிப் போட்டி நடைபெற்றது. இதில் 226 குடும்பங்கள் கலந்து கொண்டன. மே 13ல் நடந்த இறுதிப் போட்டியில் கூர்த்தாண்டா 3 க்கு 1 என்று செப்புதிராவைத் தோற்கடித்தது. இப்போட்டியைக் காண கின்னஸ்ஸின் பிரதிநிதிகள் வந்திருந்தனர். உலகிலே இத்தகைய போட்டிகள் நடப்பது இதுவே முதல் தடவை.






# கோரைப்புல் கோதை

ஐரோப்பிய நாடு ஒன்றில் ஒரு பணக்காரர் இருந்தார். அவருக்குப் பல மாளிகைகளும் ஏராளமான நில புலன்களும் இருந்தன. அவருக்கு மூன்று புதல்விகள் இருந்தனர். ஒரு நாள் அவர் தம் மூத்த மகளிடம் ''நீ என்னை எதற்கு இணையாக நேசிக்கிறாய்?'' என்று கேட்டார். அவளும் ''நான் உங்களை என் உயிருக்குச் சமமாக நேசிக்கிறேன்'' என்று கூறினாள். அடுத்து அவர் தன் இரண்டாவது மகளிடம் அதே கேள்வியைக் கேட்கவே, அவளும் ''உலகிலேயே எல்லாவற்றையும் விட உங்களைத் தான் நேசிக்கிறேன்'' என்றாள்.

அதைக் கேட்ட அவர் ''பேஷ்! பேஷ்! இருவரும் நன்றாகச் சொன்னீர்கள்'' என்று பாராட்டிவிட்டு தம் மூன்றாவது மகளிடம் ''நீ என்னை எந்த அளவிற்கு நேசிக்கிறாய்'' என்று கேட்டார். அவளும் ''நாம் சாப்பிடுவதில் எந்த அளவிற்கு உப்பைச் சேர்க்கிறோமோ, அந்த அளவிற்கு உங்களை நேசிக்கிறேன்'' என்றாள். அது கேட்டு அவர் கோபம் கொண்டார். ஏனெனில் அவள் அவரை சாப்பாட்டில் சேர்க்கும் சாதாரண உப்புக்குச் சமமாகக் கருதி விட்டாளே என்று அவர் எண்ணியது தான் காரணம்.

அவர் உடனே ''இது நாள் வரை நான் என் வீட்டில் ஒரு நச்சுப் பாம்பை வளர்த்துக் கொண்டு வந்தேன் என்று இப்போது தான் எனக்குப் புரிகிறது. நீ என்னை நேசிக்கவே இல்லை. அதனால் உனக்கு இந்த வீட்டில் இடம்

இல்லை. நீ இப்போதே வீட்டை விட்டு வெளியே போ'' என்று உரக்கக் கூவினார். அந்தப் பெண்ணும் பதில் பேசாமல் உடனேயே வீட்டை விட்டு வெளியே சென்றாள். கடுங் குளிர் அவளை பாதித்தது. அதனால் ஆற்றின் கரையில் அடர்ந்து வளர்ந் திருந்த கோரையைப் பிடுங்கி தான் அணிய தொப்பியையும், ஆடை களையும் தயாரித்து தான் ஏற்கனவே அணிந்திருந்த விலையுயர்ந்த ஆடை களை அவற்றால் மறைத்துக் குளிரி லிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொண்டாள்.

அவள் நடந்து நடந்து ஓரிடத்தில் ஒரு மாளிகையைக் கண்டாள். அதன் வாசல் கதவைத்தட்டவே, அதைத் திறந்து கொண்டு வந்தவளிடம் ''இந்த வீட்டில் வேலை செய்ய ஆள் தேவையா?'' என்று கேட்டாள். அவள் அந்த வீட்டின் சமையல்காரி. அவள் உடனே யாரும் தேவை இல்லை'' என்று கூறினாள்.

அப்போது அவள் ''எனக்கு யாருமே இல்லை. இந்த வீட்டில் இடம் கொடுத்தால் எல்லா வேலை களையும் செய்வேன். சம்பளம் என்று எதுவும் கொடுக்க வேண்டாம். சாப்பாடு மட்டும் போட்டால் போதும்'' என்று கெஞ்சினாள்.

சமையல்காரியும் அவள் மீது இரக்கப்பட்டு ''சரி. எனக்கு உதவி யாக இருந்து பாத்திரம் பண்டங் களைத் தேய்த்துக் கொடு. உனக்கு இந்த வீட்டில் இருக்க அனுமதி வாங்கி விடுகிறேன்'' என்றாள். அவளும் அதற்குச் சம்மதித்து சமையல்காரி கூறிய வேலைகளைச் செய்தும் பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவிக் கொடுத்தும் வரலானாள்.

அவள் கோரைப் புல்லாலான ஆடைகளை அணிந்து தென்பட்டதால் அவ்வீட்டில் இருந்த வர்கள், அவளைக் கோரைப்புல் கோதை என்று பெயரிட்டு அழைக்கலானார்கள்.

ஒரு நாள் அவ்வூரின் பிரமுகர் வீட்டில் ஒரு நடன விருந்து நடந்தது. அப்போது அம்மாளிகையின் வேலைக்காரர்கள் யாவருக்கும் விடு முறை அளிக்கப்பட்டு அந்த விருந்து வேடிக்கைகளைக் காண அப்பிர முகரின் மாளிகைக்கு அனுப்பப் பட்டனர். ஆனால் கோரைப்புல் கோதை தான் மிகவும் களைத்திருப்ப தால் தான் அந்த மாளிகைக்கு வர வில்லை என்று தன் சக பணியாட் களிடம் கூறி அனுப்பிவிட்டாள். அவர்களெல்லோரும் போன பின் அவள் தன் கோரைப் புல் ஆடை களைக் கழற்றி வைத்து விட்டுத் தான் அணிந்திருந்த பகட்டான பட்டு ஆடைகளுடன் அந்தப் பிர முகரின் வீட்டிற்குப் போய் நடன விருந்தில் கலந்து கொண்டாள்.

விருந்திற்கு வந்திருந்தவர்கள் யா வரும் புதிதாக வந்த அந்த அழகிய பெண் யார் என எண்ணித் திகைத்துக்



கொண்டிருந்தார்கள். அந்நாட்டு சம் பிரதாயப்படி அவள் தன் மாளி கையின் சொந்தக்காரரின் மகனுடன் சேர்ந்து நடனமாடினாள். அவனுக்கு அவளை மிகவும் பிடித்துப் போயிற்று. அவள் விருந்து முடிந்த தும் எல்லோருக்கும் முன்னதாகக் கிளம்பித் தன் மாளிகையை அடைந்து தன் கோரைப்புல் ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டு படுத்து தூங்கு பவள் போல பாசாங்கு செய்தாள்.

விருந்து முடிந்து வெகு நேரம் கழித்து வந்த பணியாட்கள் கோரைப் புல் கோதையிடம் ''அடடா! நீ விருந் திற்கு வராமல் போனதால் ஒரு அழ கான பெண்ணைக் காணும் பெரும் வாய்ப்பை இழந்து விட்டாய். அவள் எவ்வளவு அழகு தெரியுமா? அவள் அணிந்திருந்த பட்டாடைகள் மிக உயர்ந்தவை. நம் எஜமானரின் மகன் அவளுடன் சேர்ந்து வெகு நேரம் நடன மாடினார். அவருக்கு அவளைப் பிடித்துப் போயிற்று'' என்றார்கள்.

அவளும் ''அப் படியா? நான் அவளைப் பார்க்க வேண்டுமே'' என்று கூறவே அவர் களும் ''அடுத்த வாரம் இன்னொரு பிரமுகர் வீட்டில் நடன விருந்து நடக்கப் போகிறது. அப்போது அந்த அழகி வந்தாலும் வரலாம். அப்போது நீ அங்கு போய் அவளைப் பார்க்கலாம்'' என்றார்கள்.

அந்த நடன விருந்து நாளன்றும் மற்ற பணி யாட்களை அவள் முன்னதாக அனுப்பிவிட்டுத் தன் கோரைப்புல் ஆடைகளைக் களைந்து விட்டுத் தன் பகட்டான ஆடைகளில் அந்த விருந்திற்குச் சென்றாள். அவளது எஜமானனின் மகன் வந்து அவளை அழைத்துக் கொண்டு போய் வெகு நேரம் நடனமாடினான். விருந்து முடிந்ததும் அவள் எல்லோருக்கும் முன்னதாகத் தானிருக்கும் மாளி கைக்கு வந்து தன் கோரைப்புல் ஆடையை அணிந்துக் கொண்டாள். பணியாட்கள் வந்து அழகி வந்தது பற்றி அவளிடம் கூறினார்கள்.

மூன்றாவது தடவையிலும் வேறொரு பிரமுகர் வீட்டில் நடன விருந்து நடந்த போதும் அவள் தன் பகட்டான ஆடைகளை அணிந்து கொண்டு சென்றாள். அவளது எஜமானனின் மகன் வந்து அவளை அழைத்துக் கொண்டு போய் நடன மாடினான். அவளது பெயரைக் கேட்கவே அவள் கூற வில்லை. அவன் தன் மோதிரத்தைக் கழற்றி அவளது விரலில் போட்டு ''இது என் அன் பளிப்பு'' என்றான்.



வழக்கம் போல விருந்து முடிந்ததும் அவள் தன் எஜமானனின் மாளிகைக்குச் சென்று விட்டாள்.

எஜமானனின் மகன் தான் கண்ட அழகியை எல்லா இடங் களிலும் தேடிப்பார்த்தான். எங்கும் காணாது போகவே அவன் கவலை யால் படுத்த படுக்கையாகக் கிடந் தான். அப்போது சமையல்காரி அவ

னுக்குக் கஞ்சி கொடுக்கப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டாள். அப்போது கோரைப்புல் கோதை தான் கஞ்சியைக் கொண்டு போய்க் கொடுப்பதாகக் கூறிக் கஞ்சிப் பாத்திரத்தை வாங்கிக் கொண்டாள்.

அவள் அப்பாத்திரத்துள் தனக்கு அவன் கொடுத்த மோதிரத்தைக் கஞ்சியில் போட்டுக் கொடுத்தாள். கஞ்சியைக் குடித்த அவன் பாத்திரத்தின் அடியில் இருந்த மோதிரத்தைக் கண்டு ''ஆ! நான் அந்த அழகிக்குக் கொடுத்த மோதிரம். இது எப்படி இங்கு வந்தது?'' என்று கேட்டான். அவளும் ''நான் தான் இதை இந்தப் பாத்திரத்தில் போட்டேன். இதை எனக்கு ஒருவர் கொடுத்தார்'' என்றாள்.

''உனக்கு அவர் கொடுத்தாரா? நீ யார்? உண்மையைச் சொல்'' என்று கேட்டான். அவளும் தன் கோரைப் புல் ஆடைகளைக் களைந்து விட்டுத் தன் பகட்டான பட்டாடையில் அவன் முன் நின்றாள். அவன் ஓரேயடியாக மகிழ்ந்து போய் ''ஆ! நீயா! நான் உன்னைத் தான் மணப்பேன்'' என்று கூறித்தன் தந்தையிடம் தன் தீர்மானத்தைத் தெரிவித்தான். அவரும் அவளிடம் விசாரிக்கவே, அவளும் ''நானும் ஒரு பணக்காரரின் மகள் தான். என் விவாகத்திற்கு உங்களுக்குத் தெரிந்த பணக்காரர்களை அழையுங்கள். அப்போது யார் என் தந்தை என்று காட்டுகிறேன்'' என்றாள்.

அவளது திருமணத்திற்கு வந்த பணக்காரர்களில் அவளது தந்தையும் இருந்தார். அவருக்கு மட்டும் உப்பில்லாத உணவைப் பரிமாறும்படி அவள் சமையல்காரியிடம் கூறினாள். அதைச் சாப்பிட ஆரம்பித்த அப்பணக்



காரர் அந்த வீட்டு எஜமானரிடம் ''எனக்கு இப்போது தான் உப்பின் மதிப்பு எவ்வளவு என்று தெரிகிறது. என் கடைசி மகள் சாப்பாட்டில் எந்த அளவு உப்பு இருக்குமோ அந்த அளவிற்கு என்னை நேசிப்பதாகக் கூறினாள். அதை சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவளை வீட்டை விட்டே வெளியேற்றி விட்ட மகா பாவி நான்'' என்று கண்ணீர் வடித்தார்.

அப்போது கோரைப்புல் கோதை ''அப்பா! உங்களுக்கு இப்போது உப்பின் மதிப்பு தெரிந்து விட்டதல்லவா! நான் தான் உங்கள் கடைசி மகள். இந்த மாளிகையின் எஜமானரை மணக்கப் போகிறவள் நானே. உப்பில்லா உணவை உங்களுக்கு மட்டும் போடச் சொன்னவளும் நானே!'' எனக் கூறி அவர் முன் நின்றாள்.

அதன் பிறகு அவள் தன் மாமனாரிடம் ''இவர் தான் என் தந்தை'' எனவே அவரும் மகிழ்ந்து போய் ''உங்கள் பெண் அழகி மட்டுமல்ல, மிகவும் நல்லவள்'' என்று பாராட்டினார். அதன் பின் அவளது திருமணம் இனிது நடை பெற்றது.

-சோபினி. எஸ்-

# நம் இந்தியா

## வினாக்கள்

ஆகஸ்ட் 15 நம் சுதந்திர தினம். 54 ஆண்டுகளுக்கு முன் பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து நாம் விடுதலை பெற்று சுதந்திரம் பெற்றோம். இதனை நினைவு கொள்ள ஒவ்வொரு ஆண்டிலும் இந்நாளைக் கொண்டாடுகிறோம். இந்த இதழின் கேள்விகள் இந்திய சுதந்திரப் போராட்டம் பற்றியவை. யோசித்து விடைகளைக் கூறுங்கள்.

1. இந்திய ராணுவத்தின் எந்தப் பிரிவு 1857ல் முதலில் கலகம் செய்து போர்க்கொடி தூக்கியது?
2. 'இந்திய தேசியக்காங்கிரசைத் துவக்கியவர் யார்?
3. காங்கிரஸின் முதல் மாநாட்டில் தலைமை வகித்தவர் யார்? எங்கு? எப்போது?
4. அமெரிக்காவில் 'கத்தர்' கட்சியைத்துவக்கியவர் யார்?
5. சௌரி சௌராவில் காங்கிரஸ்காரர் ஊர்வலத்தை போலீசார் துப்பாக்கிச் சூட்டால் கலைத்ததால் 3000 பேர்கள் கொண்ட அக்கூட்டம் காவல் நிலயத்தையே எரித்து விட்டது. இது எப்போது நடந்தது? சௌரி சௌரா எங்கே உள்ளது?
6. ஜாலியன்வாலாப் படுகொலை என்று நடந்தது?
7. இளைஞரிடையே நாட்டுப்பற்றை வளர்க்க யார்1895ல் சிவாஜி விழாவைத் துவக்கினார்?
8. தன் நாட்டிற்கும் மக்களுக்கும் பணிபுரிய காந்திஜீ தென்னாப்பிரிக்காவிலிருந்து எப்போது இந்தியாவிற்கு வந்தார்?
9. பாலசோரில் 1915ல் போலீசாருடன் போரிட்டு உயிர் நீத்த புரட்சிக்காரர் யார்?
10. லண்டனில் இந்தியத்தலைவர்களும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களும் மூன்று வட்ட மேஜைமாநாடுகளில் கூடினார்கள். இரு தலைவர்கள் இந்த மூன்று மாநாடுகளிலும் கலந்து கொண்டார்கள், அவர்கள் யார்?
11. இன்குலாப் ஜிந்தாபாத் என்ற புரட்சிகர சொற்றொடரை அளித்தவர் யார்?
12. இந்திய தேசிய இராணுவம் எங்கு எப்போது அமைக்கப்பட்டது?

*(விடைகள் அடுத்த இதழில்)*

## ஜூலை மாத வினாக்களின் விடைகள்

1. கங்கை
2. ஜேலம்
3. கே 2
4. காஞ்சன் ஜங்கா
5. 33 சதம்
6. ஹரியானா
7. 1873
8. குஜராத்தின் பறவைகள் சரணாலயம்
9. 1774. ராணிகஞ்ச்
10. நான்காவது
11. மைக்கா
12. டில்லி
13. ராஜஸ்தான்
14. மகாநதி
15. 1871ல்

## 65. சொர்க்கலோகம் சேர்ந்தனர்

# மகாபாரதம்

தருமர் ரிஷிகளுக்கு விருந்தளித்துத் திருப்தியடையச் செய்தார். கிருஷ்ண ருக்காக பல தானங்களைச் செய்தார். பரீட்சித்துவைக் கிருபரின் சீடனாக ஆக்கினார். தன் அமைச்சர்களைக் கூட்டித் தான் மகாபிரஸ்தானம் போகப் போவதாக அவர் அறிவித்தார். அவர்கள் அவரிடம் அவ்வாறு போக வேண்டாம் என்று வேண்டிய போதிலும் தருமர் அவர்களுக்குத் தக்க சமாதானம் கூறி தாம் போவதற்கு அவர்களை இணங்க வைத்தார்.

இதற்குப் பின் பாண்டவர்களும், துரௌபதியும் தம் பட்டாடை களையும், ஆபரணங்களையும் களைந்து விட்டு மரவுரி அணிந்து கொண்டார்கள். அவர்கள் தம் அரண் மனையிலிருந்து வெளியே வந்து நகரை விட்டு செல்லலானார்கள். அவர்கள் நகருக்கு வெளியே வந்து தம் பயணத்தைத் துவக்கிய போது அவர் களைஒரு நாய் பின்தொடர்ந்து சென்றது.

தருமர் அந்த நாயையும் அழைத்துக் கொண்டு மற்ற அறுவருடன் தம் மகாப்பிரஸ்தான யாத்திரையைத் தொடர்ந்தார். அவர்களுடன் நகர வாசிகளில் சிலர் கொஞ்ச தூரம் போய் வழியனுப்பி விட்டு நகருக்கு திரும்பி வந்தனர். பாண்டவர்கள் துரௌபதி யுடன் சென்ற பின் உலூபியும் சித்தி





ராங்கதையும் அங்கிருக்கவில்லை. உலூபி கங்கை நதிக்குள் பிரவேசித்தாள். சித்திராங்கதை மணிப்புரத்திற்குச் சென்றாள். பாண்டவர்களின் மற்ற மனைவிகள் பரீட்சித்துடன் இருந்து விட்டனர்.

பாண்டவர்கள் ஒருவர் பின் ஒருவராக நடந்து கிழக்கு திக்கில் சென்றனர். அவர்கள் பல நதிகளையும் மலைகளையும் நாடுகளையும் கடந்து லௌஹித்தியம் என்ற கடலை அடைந்தார்கள்.

மகாப்பிரஸ்தானத்தில் மற்றவர்களுடன் சென்று கொண்டிருந்த அர்ஜுனன் தன் காண்டீபத்தையும் அக்ஷய அம்புராத்தூணியையும் தன்னுடன் எடுத்துச் சென்று கொண்டிருந்தான். அப்போது பாண்டவர்களின் முன் அக்கினி தேவன் தோன்றி ''நீங்கள் மகாப்பிரஸ்தானம் செல்கையில் அர்ஜுனனுக்கு காண்டீபம் எதற்கு? இது வருண தேவனுடையது. இதை அர்ஜுனன் அவனிடம் கொடுத்து விட வேண்டும்'' என்றான். அர்ஜுனனும் உடனே காண்டீபத்தையும் அக்ஷய அப்புராத்தூணியையும் கடலில் போட்டு விட்டான்.

அதன் பின் பாண்டவர்கள் தென் திசையில் சென்று வடமேற்கில் நடந்து மேற்காகத் திரும்பினார்கள். கடலில் மூழ்கிப் போன துவாரகையை அவர்கள் கண்டார்கள். அங்கிருந்து அவர்கள் வட திசையில் சென்றார்கள். இமய மலையைக் கடந்து அவர்கள் செல்கையில் முதலில் துரௌபதி இறந்து விழுந்தாள்.

தருமர் அதை அறிந்தும் திரும்பி பாராமலே நடக்கலானார். அதன் பின் வரிசையாக சகாதேவன், நகுலன், அர்ஜுனன் ஆகியோர் இறந்து விழுந்தார்கள். அப்போதும் தருமர் திரும்பிப் பார்க்கவில்லை.

இதற்குப் பின் பீமனும் விழுந்து இறந்தான். அப்போதும் தருமர் திரும்பிப் பாராமல் சென்று கொண்டே இருந்தார். அவர் பின்னால் நாய் மட்டும் போய்க் கொணடே இருந்தது. சற்று நேரமானதும் இந்திரன் தன் ரதத்துடன் வந்து தருமர் முன் நின்று ''நீங்கள் இதில் ஏறிக் கொள்ளுங்கள். சொர்க்கத்திற்குப் போகலாம்'' என்றான்.

தருமரோ ''என் தம்பிகளும் துரௌபதியும் என் கூட இல்லாத போது எனக்கு சொர்க்கம் எதற்கு? அவர்களும் அங்கிருந்தாலே நானும் அங்கே இருப்பேன்'' என்றார். இந்திரனும் ''இறந்த பின் அவர்களும்



சொர்க்கத்தை வந்தடைந்து விட்டார்கள். உங்களுக்கு பூத உடலுடன் சொர்க்கத்தை அடையும் பாக்கியம் கிட்டியுள்ளது'' என்றான்.

அப்போது தருமர் ''இந்த நாய் என் பின் தொடர்ந்து விசுவாசத்துடன் வந்து கொண்டிருக்கிறது. இதுவும் என்னுடன் வர வேண்டும்'' என்றார்.

இந்திரனோ ''சொர்க்கத்திற்குச் செல்லும் உங்களுக்கு நாய் எதற்கு? இதை விட்டு விட்டு வாருங்கள்'' என்றான்.

தருமர் அதற்கு இணங்கவில்லை. நாய்க்கு சொர்க்கத்தில் இடம் தர முடியாது என்று எவ்வளவோ சொல்லியும் தருமர் அதை ஏற்கவில்லை. அப்போது நாயாக வந்த எமதர்மன் தருமரின் முன் வந்து ''வன வாசத்தின் போது யட்சனாக வந்து உன்னை ஒரு முறை பரீட்சித்தேன். இப்போது நாயாக வந்து பரீட்சித்தேன். உனக்கு இணையானவர் எங்குமே இல்லை. நீ இந்த உடலுடன் உத்தமலோகங்களுக்குச் செல்லலாம்'' என்றான்.

தேவர்களெல்லோரும் தருமரை ரதத்தில் அமர்த்தினர். அவரது ரதம் முன் செல்ல அதன் பின்னால் அவர்கள் தம் ரதங்களில் அமர்ந்து சென்றனர். அப்போது இந்திரன் ''சொர்க்கத்தை அடையும் நீங்கள் ஏன் இன்னமும் மானிட சம்பந்தத்தை வைத்துக் கொள்ள விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான்.

தருமரோ ''என் தம்பிகளையும் துரௌபதியையும் விட்டுப் பிரிந்திருக்க என் மனம் ஒப்பவில்லை. அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? நானும் அங்கேயே இருக்கிறேன்'' என்றார்.

சொர்க்கத்திற்குச் சென்ற தருமர் அங்கு தேவர்களிடையே உயர்ந்த



ஆசனத்தில் துரியோதனன் அமர்ந்திருப்பதைக் கண்டார். அதனால் அவர் முகத்தைத் திருப்பிக் கொண்டு ''பேராசை பிடித்த இந்த துரியோதனன் இருக்கும் இந்த சொர்க்கத்தில் நான் இருக்க விரும்பவில்லை'' என்றார். அதைக் கேட்ட நாரதர் சிரித்து ''தருமா! சொர்க்கத்தில் பழைய பகைமையை மறந்து விட வேண்டும். அந்த துரியோதனன் வீர மரணம் அடைந்து சொர்க்கத்திற்கு வந்திருக்கிறான்'' என்றார்.

அப்போது தருமர் ''எல்லாப்பாவச் செயல்களையும் புரிந்த துரியோதனன் சொர்க்கத்தில் இருக்கிறானே. ஆனால் என் தம்பிகளோ பாவம் செய்யாதவர்கள். அவர்கள் இங்கே இல்லையே? எங்கே இருக்கிறார்கள்?'' என்று கேட்டார். மேலும் பாரதப்போரில் மடிந்த திருஷ்டத்யும்னன், அபிமன்யு, கர்ணன் போன்ற பலரும் ஏன் சொர்க்கத்தில் இல்லை என்றும் கேட்டார்.

அதற்கு தேவர்கள் ''உங்களை அவர்கள் இருக்கும் இடத்திற்கு அழைத்துப்போகும்படிக் கட்டளை இடப்பட்டுள்ளது. அவர்களைப் பார்த்த பின் உங்கள் விருப்பப்படி செய்யுமாறு தேவேந்திரன் கூறியுள்ளார்'' என்றார்கள். பிறகு ஒரு தேவன் தருமரை அழைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றான். போகும் வழியில் பல பாவிகளை கண்டார். அவர் சென்ற வழியில் ரத்தமும் மாமிசத்துண்டுகளும் இரைந்து கிடந்தன. ஈக்களும் கொசுக்களும் அவற்றை மொய்த்துக் கொண்டிருந்தன. எங்கும் தலைமயிரும் எலும்புகளும், கிருமிகளும் புழு பூச்சிகளும் இருந்தன. ஆங்காங்கே நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. வெந்நீர் நிரம்பி ஆவியை வெளி விட்டுப் பாயும் ஒரு நதியை தருமர் கண்டார்.

அப்போது தருமர் தன்னுடன் வந்த தேவனிடம் ''இப்படியே நாம் இன்னமும் எவ்வளவு தூரம் போகப் போகிறோம்?'' என்று கேட்டார். அவனும் ''உங்களுக்கு இப்படி நடந்து வந்தது சிரமமாக இருப்பது போலத்தெரிகிறது. இனிமேல் போக வழியும் இல்லை. நாம் திரும்பி பழைய இடத்திற்கே போய் விடலாம்'' என்றான். தருமர் நிராசை அடைந்தார். மேலும் அங்கேயுள்ள துர்நாற்றத்தையும் சகிக்க முடிய வில்லை.

அப்போது சில குரல்கள் கெஞ்சுவது போல ''நீங்கள் வந்தது எங்க



ளுக்குச் சுகமாக உள்ளது. இன்னும் கொஞ்ச நேரம் இருங்கள்'' என்றன. அது கேட்டு தருமர் ''நீங்களெல்லாம் யார்? ஏன் இங்கு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். அப்போது 'நான் தான் கர்ணன்', 'நான் தான் பீமன்', 'நான் தான் அர்ஜுனன்', 'நான் நகுலன், 'நான் சகாதேவன்', நான் துரௌபதி'' என்று அக்குரல்கள் கூறின.

அதைக் கேட்டு தருமர் தம் மனதுள் ''இவர்கள் என்ன பாவங்களைச் செய்து இங்கே இருக்கிறார்கள்? எந்த புண்ணியச் செயல் புரிந்து துரியோதனன் சொர்க்கத்தை அடைந்தான்? ஒரே குழப்பமாக இருக்கிறதே. நான் கேட்டதும் கண்டதும் யாவும் உண்மைதானா?'' என எண்ணம் இட்டார்.

பிறகு அவர் விரக்தியுடன் ''நீ வந்த வழியே போய் விடு. நான் அங்கே வர மாட்டேனென்று அவர்களிடம் கூறி விடு. நான் என் சகோதரர்களை இங்கே இப்படியே விட்டு விட்டு வர மாட்டேன். நான் வந்ததால் இவர்கள் சுகமடைந்ததால் இனி நான் இவர்களுடனேயே இருப்பேன்'' என்றார். அந்த தேவனும் அங்கிருந்து போய் தேவேந்திரனிடம் நடந்ததை எல்லாம் சொன்னான்.

தருமர் இரண்டு நாழிகை நேரம் அங்கே இருந்தார். இதற்குப் பின் தேவேந்திரன் மற்ற தேவர்களுடன் அங்கு வந்தான். அவர்கள் வந்ததும் அங்கு சூழ்ந்திருந்த இருள் விலகியது. பாவிகளின் கூச்சல்கள் அடங்கின. நீராவியை வெளியேற்றிக் கொண்டிருந்த வைதரணி நதி

மறைந்தது. மெல்லிய காற்று வீசி நறு மணத்தைப் பரப்பியது.

தேவேந்திரனும் ''தருமரே! உங்கள் செயலில் தேவர்கள் யாவரும் பாராட்டுகிறார்கள். நீங்கள் இங்கே இருந்தது போதும். எங்களுடன் வாருங்கள். உங்களுக்கும் உங்கள் சகோதரர் களுக்கும் உயர்ந்த சொர்க்கம் கிடைக்கும். நீங்கள் சற்றும் மனம் உடைந்து போக வேண்டாம். ஒவ் வொருவனும் தான் செய்த புண்ணிய பாவச் செயல்களின் பலனை அனு பவித்தேயாக வேண்டும். முதலில் புண்ணியச் செயல்களின் பலன்களை அனுபவித்து விட்டால் பிறகு பாவச் செயல்களின் பலன்களை அனுபவிக் கவும் வேண்டும். முதலில் பாவச் செயல்களின் பலன்களை அனு பவித்து விட்டால் பிறகுபுண்ணியச் செயல்களின் பலன்களை அனு பவிக்கலாம். புண்ணியச் செயல் களின் பயன்களை அனுபவித்தால் பிறகு பாவச் செயல்களின் பலன்களை ஒருவர் அனுபவிக்கலாம். குறைந்த பாவத்தைச் செய்தவன் முதலில் நரக லோகத்தை அடை கிறான். அதற்காகத் தான் முதலில் உங்களை நரக வேதனை அனுபவிக்க அனுப்பினேன். உங்கள் சகோதரர்களும் துரௌபதியும் அவர்கள் செய்த பாவங்களுக்காக முதலில் நரகலோகம் சென்றார்கள். இப்போது அவர் களுடைய பாவங்கள் போய் விட்ட தால் சொர்க்கத்திற்குச் சென்று விட்டார்கள். நீங்களே வந்து பாருங்கள். நீங்கள் மிக அதிக புண்ணியச் செயல்கள் புரிந்து அவற்றின் பலனைப் பெற்றீர்கள். உங் களுக்கு சொர்க்கத்தில் மிக உயரிய இடமே இருக்கிறது'' எனச் கூறினான்.

அப்போது ஆகாயகங்கை அவர் மீது புனித நீரைப் பொழிந்தது. அவர் தனது மானவ உடலை விட்டு சொர்க்க வாசியாக ஆகி விட்டார். அங்கு அவர் கிருஷ்ணர், அர்ஜுனன், கர்ணன், பீமன், நகுலன், சகாதேவன், துரௌபதி, அபிமன்யு, பாண்டு மன்னன், குந்தி, மாத்ரி, பீஷ்மர், துரோணர் முதலியவர்களையும் கண்டு பரவசப்பட்டு நின்றார்.

(முற்றிற்று)



6

# வீரதீர பராக்கிரமன்

ஓவியம் : பாணி

அதிகாரிகளின் கண்களில் மண்ணைத் தூவி கொள்ளையடித்தவர்களை ஆதித்தன் பிடித்துச் சிறையில் அடைத்தான். ஆனால் சேனாதிபதி தன் மகனைக் காக்க மன்னனின் கட்டளை பெற்று, அவர்களையெல்லாம் விடுதலை செய்தான். விடுதலையான வீரபாகு ஆதித்தனிடம் அவனது தந்தையின் மர்மச்சாவு பற்றிய விவரங்களைக் கூறினான். சேனாதிபதியின் கொட்டத்தை அடக்க ஆதித்தனுக்குக் கைகொடுப்பதாக வீரபாகு வாக்களித்தான். கருடன் சேனாதிபதியின் மகனைக் கொடிக் கம்பத்தில் கட்டி எச்சரித்தான். கருடனைப் பிடித்து வரும்படி மன்னன் சேனாதிபதிக்கும் மற்ற படைத்தலைவர்களுக்கும் கட்டளை இட்டான்.

கருடனைத் தேடிக் கண்டு பிடிக்க எட்டு படைத்தலைவர்கள் நியமிக்கப்பட்டனர்.

எட்டு படைத்தலைவர்களும் எட்டு திசைகளில் சென்றனர்.

கருடன் தன் ஆட்களில் எட்டு பேர்களுக்கு கருடன் போல வேஷம் போட்டு எட்டு திசைகளில் அனுப்பினான்.




தன் வீரர்கள் வெற்றி பெற்றுக் கொண்டிருப்பதாக சேனாதிபதி பெருமையடித்துக் கொண்டான்.


''சேனாதிபதி! நம் வீரர்கள் கருடனைப் பிடித்து விட்டார்களா? எங்கே அந்த கருடன்?''


அநத விவரங் களை எல்லாம் இப்போது கூற மாட் டேன். நீயே உன் கண் ணெதிரில் விரைவில் கருடனைக் காணப் போகிறாய்.''


அனறிரவு சேனாதிபதி தன படுககை அறையில் கருடன் படுத்து உறங்கிக் கொண் டிருப்பதைக் கண்டான். உடனே அவன் தன் மெய்க்காவலாளிகளைக் கூப்பிட்டான்.


''அவர்கள் தேவையில்லை, சேனாதிபதி! அவர்கள் ஒரு அடி கூட முன்னால் எடுத்து வைக்க முடியாது.''


''துணிவிருந்தால் என்னுடன் சண்டையிட வா! இருவரும் சண்டை போடலாம்.''


நரேந்திரதேவன் வாளை உருவித் தாக்கினான். கருடன் சாமர்த்தியமாக அத்தாக்குதலிலிருந்து தப்பினான்.


மின்னல் போல இங்கும், அங்கும், எங்குமாக கருடனே தென்பட்டான்.
கருடன் அடித்த ஒரு அடியால் நரேந்திர தேவனின் வாள் எங்கோ போய் விழுந்தது. அவன் திகைத்துப் போய் விழுந்தான்.


இச்சமயத்தில் கருடன் ஏரியில் ஒரு படகில் இருக்கிறானென்று தெரியவரவே எட்டுப் படைத்தலைவர்களும் அந்த ஏரியை நோக்கி விரைவாக ஓடினார்கள்.


படைத்தலைவர்கள் அந்தப் படகை அணுகினார்கள். படகில் கருடன் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.


கருடன் நினைவிழந்து கிடப்பது கண்டு அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.


கருடனின் முகத்திரையை அகற்ற சேனாதிபதியே முயல வேண்டுமென ஒரு படைத்தலைவன் கூற மற்றவர்களும் அதுவே சரி என்றனர்.


சங்கிலியால் பிணைத்து இவனை மன்னரிடம் இழுத்துச் செல்வோம்''
தொடரும்.



# சாது மிரண்டால்...!

நெல்லிக்காய் ஊரில் நஞ்சப்பன் என்ற விவசாயி இருந்தான். அவன் தனக்கிருந்த இரண்டு ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்து கொண்டு மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந் தான். அதே ஊரில் அருணாசலம் என்ற பணக்காரன் இருந்தான். அவன் பிறருக்கு சொத்தின் பேரில் கடன் கொடுத்து அநியாய வட்டிபோட்டு அவர்கள் கடனை தீர்க்க முடியாமல் போகும் நிலையை உருவாக்கி அவர் களது சொத்துக்களைத் தனதாக்கிக் கொண்டு வந்தான்.

நஞ்சப்பனின் தந்தை எப்போதோ கொஞ்சம் பணம் அருணாசலத்திடம் கடன் வாங்கி இருந்தான். அதை அவன் தீர்க்க முடியாமல் ஆண்டு தோறும் அறுவடை ஆனதும் நெல்லின் ஒரு பகுதியை வட்டிக் காகக் கொடுத்து வந்தான். நஞ்சப் பனாலும் கடனை அடைக்க முடியாத தால் தன் தந்தை செய்தது போல அறு வடையானதும் நெல்லில் ஒரு பகுதியை வட்டிக்காகக் கொடுத்து வந்தான்.

அந்த ஆண்டில் அறுவடைக்கு முன் அருணாசலத்தின் நாலைந்து மாடுகள் நஞ்சப்பனின் வயலில் புகுந்து பயிரில் கணிசமான பகுதியை மேய்ந்து விட்டன. ஊரில் பலர் அது பற்றி கிராம அதிகாரியிடம் புகார் செய்யும்படிக் கூறினர். ஆனால் நஞ்சப்பனோ ''புகார் கொடுப்ப தெல்லாம் எதற்கு? நானே அவரிடம் சமாதானமாகப் பேசி பிரச்சினைக்கு முடிவு காண்கிறேன்'' என்றான்.

ஆனால் அது நடக்கவில்லை. வயலில் அறுவடையாகும் போதே அருணாசலம் வந்து வட்டியின் கீழ் எல்லா நெல்லையும் எடுத்து

வண்டியில் ஏற்றினான். நஞ்சப்பன் அவனது மாடுகள் வயலில் புகுந் ததைக் கூறிப்பயிரை நாசம் செய்து விட்டதென்றும் நெல் இல்லா விட்டால் தன் குடும்பம் பட்டினி கிடக்க வேண்டுமென்றும் அடுத்த அறுவடையில் எல்லா நெல்லையும் சேர்த்துக் கொடுப்பதாகக் கூறினான். ஆனால் அருணாசலம் அதை ஏற் காமல் வண்டியை ஓட்டச் சொல் லவே, நஞ்சப்பன் கோபமாக ''அடே அருணாசலம்!'' என்று பற்களை நற நறவென்று கடித்தவாறே கூவினான்.

அருணாசலம் திகைத்துப் போனான். சாதுவாக இருந்த நஞ்சப் பனா துணிவுடன் பெயர் சொல்லித் தன்னைக் கூப்பிடுகிறான் என்று எண்ணி மலைத்தான். அப்போது நஞ்சப்பன் ''நான் மட்டும் நேர்மை யானவன் என்பது உண்மையானால் நாளை விடிவதற்குள் உன் சொத் தெல்லாம் அழிந்து உன் வீடே இடிந்து பாழாகட்டும். நான் உனக்குக் கொடுக்கும் இந்த சாபத்திற்கு வானத்து சூரியனே சாட்சி'' என எல் லோரும் கேட்கும்படி உரக்கக் கூறி னான். அருணாசலமோ கேலியாகச் சிரித்துக் கொண்டே சென்றான்.

அன்றிரவு அவ்வூர் வானத்தில் கரு மேகங்கள் சூழ்ந்தன. மழை ஒரேயடி யாகக் கொட்டியது. மின்னல் வெட் டியது. பலத்த இடி பயங்கரமாக இடித்து அருணாசலத்தின் வீட்டின் மீது விழுந்தது. அதனால் அந்த வீடு இடிந்து அதிலிருந்த அருணாசலத்தின் குடும்பமே அழிந்தது.

இச்சமயத்தில் நாரதர் பூலோக சஞ் சாரம் செய்தவாறே அங்கு வந்தார். நஞ் சப்பன் அருணாசலத்திற்குக் கொடுத்த சாபம் பலித்து விட்டது கண்டு ஆச்சரியப்பட்டார். ஒரு சாதாரண மனிதனுக்கு இவ்வளவு சக்தியா





என்று எண்ணி சத்தியலோகத்தை அடைந்ததும் தன் தந்தையான பிரம்ம தேவரிடம் ''தந்தையே! இன்று பூலோ கத்தில் ஒரு அதிசயம் நடந்தது. நஞ் சப்பன் என்ற ஒரு சாதாரண மனிதன் அருணாசலம் என்ற பணக்காரனை 'நீ நாசமாகப் போவாய்' என்று சபித் தான். அது அப்படியே நடந்து விட்டது. நஞ்சப்பனுக்கு அவ்வளவு சக்தி உள்ளதா?'' என்று கேட்டார்.

பிரம்மாவும் சிரித்தவாறே ''நாரதா! நீ நினைப்பதுபோல நஞ்சப்பன் சாதாரண மனிதனல்ல. நேர்மை யானவன் நியாய வழியில் செல் பவன். சுயநலமற்றவன். அதனால் தான் அவன் கூறியது அப்படியே பலித்தது. இதை நீ புரிந்து கொள்ள பூவுலகில் அங்கே பார்'' என்று ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினார்.

ஒரு காட்டுப்பாதையில் வினய சாகரர் என்ற சன்னியாசி போய்க் கொண்டிருந்தார். அங்கே கால துஷ்டன் என்ற கொடிய விஷப்பாம்பு ஒரு புதருகே படுகாயமுற்று விழுந்து துடிதுடித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அது வினயசாகரரைப் பார்த்ததும் ''சுவாமி! என்னைத் தெரிகிறதா?'' என்று கேட்டது. அவரும் அதை உற்றுப் பார்த்து விட்டு ''ஓ! நீ காலதுஷ்டன் தானே? உனக்கா இந்த கதி!'' என்று கேட்டார்.

காலதுஷ்டனும் ''ஆமாம் சுவாமி. அன்று நீங்கள் கூறியபடி நடந்ததால் இன்று இந்த நிலையில் இருக் கிறேன். இவ்வழியாக வருபவர் களைத் தீண்டாமல் 'புஸ்'ஸென்று சத்தமிட்டு பயமுறுத்தலானேன். இப்படியே கொஞ்காலம் வரை நான் செய்து கொண்டிருக்கவே அவர்கள் என் விஷக் கோரைப்பற்கள் போய் விட்டதாக எண்ணி விட்டார்கள். அதனால் என்னைக் கண்டு பயப் படாமல் என்னைக் குத்தி, அடித்துக் காலால் உதைத்துத் தள்ளலானார்கள். நான் எல்லா வற்றையும் பொறுத்துக் கொண்டு வருகிறேன். இனி நான் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள்'' என்று கேட்டது.

அதைக் கேட்ட வினயசாகரர் பெரு மூச்சு விட்டு ''உனக்கு நடந்தது போல முன்பு பலருக்கும் நடந்திருக்கிறது. இதற்குக் காரணம் உன் போன்ற தர்ம நியாயத்திற்குக் கட்டுப்பட்டு நடப் பவர்கள் மனிதன் பிறரைத் தொல்லை

படுத்துவதைச் சரியாகப் புரிந்து கொள்ளாதது தான் காரணம். காலதுஷ்டா! முதலில் உன் உடலின் காயங்களையும் வலியையும் போக்குகிறேன்'' எனக் கூறி அதன் உடலைத் தடவினார்.

அதன் உடலின் காயங்கள் மறைய, அது முன்பிருந்தது போலா கியது. பிறகு அவர் ''தர்ம நியாயமாய் நடப்பவன் நெருப்பிற்குச் சமம். நெருப்பைத் தொட்டால் அது சுட்டு விடும் என்பதை அறியாத மூடர்களுக்கு அதை அறியவைப்பது நெருப்பே. நான் சொன்னது புரிந்ததா?'' என்று கேட்டார். காலதுஷ்டனும் தலையை ஆட்டி புரிந்தது என்றது.

வினயசாகரர் அங்கிருந்து சென்ற பின், சற்று நேரம் கழித்து இருவர் வந்தனர். ஒருவன் கையில் நீண்ட கோல் இருந்தது. மற்றவனிடம் பாம்புகளைப் போட்டு மூடி வைக்கும் பாம்புப்பெட்டி இருந்தது. கையில் கோலை வைத்திருந்தவன் காலதுஷ்டன் இருக்கும் புதரைப் பார்த்து ''இங்கு தான் பல் போன அந்தப் பாம்பு இருக்கிறது. நான் கோலால் குத்தி பாம்பைப் புதரிலிருந்து வெளியே வரச் செய்கிறேன். நீ பயமில்லாமல் அதனைப் பிடித்துப் பெட்டிக்குள் போட்டு விடு'' என்றான்.

அவன் புதரைக் கோலால் குத்தவே காலதுஷ்டன் சீறிப் பாய்ந்து வந்து அவன் கழுத்தில் ஒரு கடி கடித்தது. அடுத்து அது மற்றவன் மீது பாயப் போகவே, இருவருமே ''ஐயோ பாம்பு'' என்று அலறிக் கொண்டே ஓடினார்கள். சாது மிரண்டால் காடு கொள்ளாது தானே.

நாரதரும் ''தர்மநியாயம் தவறாதவன் நெருப்புக்குச் சமமே. இது நஞ்சப்பன் விஷயத்தில் உண்மையே'' என்றார்.






# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு அக்டோபர் 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





இலை இல்லாத மரம்
ஓலை இல்லாத குடிசை

வாழ்த்துக்கள்

ஜுன் 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:
கே. ரமணி
நெ. 59, ஜே. என் ரோடு
அனகாபுத்தூர்
சென்னை-70

அம்புலிமாமா வருட சந்தா:

இந்தியாவில் ரூ.120/–
Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

